மலர் - 1 இதழ் - 11



# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு ஆய்விதழ்
மே. 2023
தனிச்சுற்றுக்கு மட்டும்
ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி





அன்பளிப்பு உரூபாய்: 120/-



தமிழர் இலக்கிய சமய பண்பாட்டு ஆய்விதழ்

# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

*மலர்-1* *மே – 2023* *இதழ்-11*





*தனி இதழ் ............................................. ரூ 120*
*அரையாண்டு சந்தா ............................. ரூ 600*
*ஆண்டு சந்தா......................................... ரூ 1200*

Google Pay / Phone Pay *மூலம் செலுத்த*
*+91 7010997639*

**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639

*கட்டுரைகள் அனுப்புவோர்*

rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com *க்கு அனுப்பவும்*




# பாரதிதாசன் தமிழ்ப் பற்றுக் கவிதை

## எந்நாளோ

*என்னருந் தமிழ்நாட்டின் கண்*
*எல்லோரும் கல்விகற்றுப்*
*பன்னறும் கலைஞானத்தால்,*
*பராக்கிரமத்தால், அன்பால்,*
*உன்னத இமமலைபோல்*
*ஓங்கிடும் கீர்த்தி எய்தி*
*இன்புற்றார் என்று மற்றோர்*
*இயம்பக் கேட்டிடல் எந்நாளோ?*

*கைத்திறச் சித்திரங்கள்,*
*கணிதங்கள் வான நூற்கள்*
*மெய்த்திற நூற்கள், சிற்பம்,*
*விஞ்ஞானம், காவியங்கள்*
*வைத்துள தமிழர் நூற்கள்*
*வையத்தின் புதுமை என்னப்*
*புத்தகசாலை எங்கும்*
*புதுக்குநாள் எந்தநாளோ?*

*பார்த்தொழில் அனைத்தும் கொண்ட*
*பயன் தரும் ஆலைக்கூட்டம்*
*ஆர்த்திடக் கேட்பதென்றோ?*
*அணிபெறத் தமிழர்கூட்டம்*
*போர்த்தொழில் பயில்வதெண்ணிப்*
*புவியெலாம் நடுங்கிற்றென்ற*
*வார்த்தையைக் கேட்டு நெஞ்சு*
*மகிழ்ந்து கூத்தாடல் என்றோ?*

- ***பாவேந்தர் பாரதிதாசன்***

## உள்ளடக்கம்





தொடர்ச்சி

# பதிற்றுப் பத்து

**அன்பு ஜெயா**, **நிறுவனர்**,
தமிழ் வளர்ச்சி மன்றம், சிட்னி
ஆஸ்திரேலியா.



**முதலாம் பத்து**

பாடியவர் பெயர் தெரியவில்லை.

**பாட்டுடைத்தலைவன் - சேரமான் உதியஞ் சேரலாதன்**

இந்தப் பத்து, சேரமான் உதியஞ்சேரலாதனைப் பற்றிப் பாடப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது. ஆனால், அதற்குச் சரியான ஆதாரம் இல்லை.

இவனுடைய பெயர் சேரமான் பெருமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன். இளங்கோவடிகளும், மாமூலனாரும், முரஞ்சியூர் முடிநாகராயரும் இவனைப் பற்றி பாடியுள்ளனர்.

*"ஓரைவர், ஈரைம்பதின்மர் உடன்று எழுந்த*

*போரில் பெருஞ்சோறு போற்றாது தானளித்த*

*சேரன்", (சிலப்பதிகாரம் 6. வாழ்த்துக் காதை 22-24)*

-என்று இளங்கோவடிகளும், இவன் பாரதப் போரின் போது இரண்டு பக்கத்துப் பெரும் படையினருக்கும் பெருஞ்சோறு அளித்துப் புகழ் பெற்றவன் என்று குறிப்பிடுகின்றார்.

அதேபோல்,

*"ஈரைம் பதின்மரும் பொருது களத்து ஒழிய,*

*பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்", (புறம் 2: 15-16)*

-என்று முரஞ்சியூர் முடிநாகராயர் இயற்றிய புறநானூற்றுச் செய்யுளும் கூறுகின்றது.

*"------உதியஞ் சேரல்*

*பெருஞ் சோறு கொடுத்த ஞான்றை,"*

-என்று மாமூலனாரும் அவர் இயற்றிய அகநானூற்றுப் பாடலில் *(அகம் 233: 8-9)* உதியஞ்சேரலாதனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

உதியஞ்சேரலாதன் சிறப்பைக் குறித்து எழுதப்பட்ட முதற்பத்து கிடைக்கப்பெறவில்லை. பாடியவர் பெயரும் தெரியவில்லை. இவனுடைய தேவி வெளியத்து வேண்மாள் நல்லினி. இவர்களுக்குப் பிறந்தவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இரண்டாம் 10-ன் பாட்டுடைத் தலைவன்.

**இரண்டாம் பத்து**

பாடியவர் - குமட்டூர் கண்ணனார்

இவர் பாடியுள்ள பாடல் இரண்டாம் பத்து. இவரால் பாடப்பட்ட சேர மன்னன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இவர் பாடிய பாடலுக்காக நெடுஞ்சேரலாதன் இவருக்கு உம்பற்காட்டுப்பகுதியில் உள்ள 500 ஊர்களை பரிசாக அளித்ததுடன், அவனுடைய நாட்டின் தென்பகுதியில் இருந்து வரும் வருமானத்தில் ஒரு பகுதியை அவருக்கு கொடுத்தான் என்றும் அறியப்படுகிறது. இவர் குமட்டூர் என்னும் ஊரைச் சேர்ந்தவர். இவரது பெயர் கண்ணனார். குமட்டூர் என்பது பண்டைய தமிழகத்து ஊர்களில் ஒன்று. இந்த பெயருடைய ஊர் இப்போது எங்கும் காணப்படவில்லை.

இவர் ஓய்மா நாட்டு ஊரைச் சேர்ந்தவர் என்று பேராசிரியர் ஔவை துரைசாமிப்பிள்ளை அவர்கள் கூறுகிறார். சங்கநூல்களில் இவர் பாடியதாக வரும் பாட்டு இந்த பத்துப் பாட்டுகள் மட்டுமே.

**பாட்டுடைத்தலைவன் - இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்**

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வஞ்சி நகரில் இருந்து, 58 ஆண்டுகள், நல்ல பண்புடனும் சிறப்போடும், எல்லோரும் போற்றும் படியும் ஆட்சி புரிந்துள்ளான். இவனுடைய பிள்ளைகள், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆகியோர். இவர்கள் மூவரைப் பற்றியும் பத்துப் பத்துப் பாடல்கள் உள்ளன.



இவனுடைய காலம் வடக்கே ஆரியப் பேரரசுகள் வலுப்பெற்று இருந்த காலம். மௌரியப் பேரரசுகள் தோன்றிய கால எல்லையை இவன் காலமாக வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

இவன் வடக்கிலிருந்த மன்னர்கள் பலரையும் வெற்றிகொண்டு இமயம் வரை தன்னுடைய ஆட்சியை விரிவு செய்தவன். அதனால் இவன் “இமயவரம்பன்” என்னும் சிறப்புப் பெயருடன் வழங்கப்படுகின்றான்.

போரில் பெற்ற பெருஞ்செல்வங்களைப் படைகளுக்கும், குடிமக்களுக்கும் அளித்துள்ளான்.

இவனுடைய வஞ்சி நகரில் வந்து தங்கியவர்களுடைய பசியைப் போக்கிட, ஆட்டு இறைச்சியினை இட்டுச் சமைத்த, வெண்ணெல் அரிசியினாலான சோற்றைப் படைத்து, தெளிந்த கள்ளினையும், புதிய ஆடைகளையும் அணிகலன்களையும் வழங்கிச் சிறப்பித்துள்ளான் என்பதை,

மையூன் பெய்த, வெண்ணெல் வெண்சோறு,
நனையமை கள்ளின் தேறலொடு மாந்தி,
நீர்ப்படு பருந்தின், இருஞ்சிறகு அன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த, பின்றை

நூலாக் கலிங்கம், வாள் அரைக் கொளீஇ (பாடல் 2: 17-21)

(மையூன் = ஆட்டிறைச்சி; கள்ளின்தேறல் = கள்ளின் தெளிவு ; சிதாஅர் = கிழிந்த ஆடை; நூலாக்கலிங்கம் = நூற்கப்படாத நூலாலாகிய ஆடை, பட்டாடை)

என்ற பாடல் வரிகளில் குமட்டூர் கண்ணனார் குறிப்பிடுகிறார்.

கழாத்தலையார், பரணர் ஆகியோர் பாடியுள்ள குடக்கோ நெடுஞ்சேரலாதனும், காப்பியாற்றுக் காப்பியனார், மாமூலனார் ஆகியோர் பாடிய சேரலாதன் என்பவனும் இவனே என்று கூறுகின்றனர்.

சோழன் பொருநற்கிள்ளியுடன் நடந்த பெரும் போரில் "பெரும் புண்பட்டு" அந்த நிலையிலும் தன்னைப் பாடிய கழாஅத்தலையாருக்குத் தன்னுடைய மார்பில் அணிந்திருந்த ஆரத்தை வழங்கிய சிறப்புப் பெற்றவன் இவன். இதைப் பற்றிப் புறநானூற்று 368வது பாடல் குறிப்பிடுகின்றது.

வெண்ணிக் குயத்தியார் புறநானூற்றுப் பாடல் 66-ல் "இவன் புறப்புண் நாணி வடக்கிருந்து புகழ் உலகம் எய்தினான்", என்று கூறுகின்றது.

**மூன்றாம் பத்து**

பாடியவர் - பாலைக் கோதமனார்

இவருடைய இயற்பெயர் கோதமனார். இவர் பாலைத்திணை பற்றிப் பாடுவதில் சிறந்தவர் என்பதால் இவருக்கு பாலைக் கோதமனார் என்ற பெயர் வழங்கலாயிற்று. இவர் இமயவரம்பனின் தம்பியும் மாவீரனுமாகிய பல்யானைச் செல்கெழு குட்டுவனை மூன்றாம் இந்தப் பத்தில் பாடிச் சிறப்பித்துள்ளார். இவர் கடவுள் நம்பிக்கையிலும், யாக வேள்விகள் நடத்துவதிலும் நம்பிக்கை உடையவர். அறநெறியில் வாழ்ந்து வந்தவராதலால், போரினால் நாட்டுக்கும் மக்களுக்கும் ஏற்படும் அழிவுகளை எல்லாம்

படிப்பவர்கள் நெஞ்சம் உருகும்படி எடுத்துக்காட்டி, நிலையாமையை உணர்த்தி, நெறியுடன் வாழ்தலை வலியுறுத்துகின்றார். இவருடைய பாடல்களை கேட்டு மகிழ்ந்த அரசன் உங்களுக்கு வேண்டியதைக் கேளுங்கள் என்று கூறினான். அதற்கு இவர் நானும் என் மனைவியும் சொர்க்கம் போக வேண்டும் என்று கேட்கின்றார். அவர் கேட்டுக்கொண்டபடி, 10 பெரிய வேள்விகளை நடத்தி அவர்களை சொர்க்கத்துக்கு அனுப்பினான் பல்யானை செல்கெழுகுட்டுவன் என்று இந்த பாடலின் மூன்றாம் பத்தின் பதிகம் கூறுகின்றது.

**பாட்டுடைத்தலைவன் - பல்யானை செல்கெழு குட்டுவன்**

பல்யானைச் செல்கெழுகுட்டுவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் உடன் பிறந்தவன். இவனைப் பற்றிய செய்திகளை பாலைக் கௌதமனார் பாடியுள்ள இந்த பதிற்றுப்பத்து பாடல்களில் மட்டுமே காணமுடிகின்றது. மற்ற சங்க நூல்களில் இவனைப் பற்றிய செய்திகள் எதுவும் காணப்படவில்லை.



இவன் வேள்விகள் இயற்றுறவதில் பற்றுடையவன் என்பதைச் சுட்டிக்காட்டும் பாலைக் கோதமனார்:

இவனுடைய நாட்டில் எழுகின்ற வேள்வித் தீயின் புகையையும், இவனை நாடி வருபவர்கள் அளவில்லாது உண்பதற்காக சமைக்கும் நெய்யின் மணத்தையும் கடவுளரும் விரும்புவர் என்பதை,

ஊனத்து அழித்த, வால்நிணக் கொழுங்குறை

குய்யிடு தோறும் ஆனாது ஆர்ப்ப,

கடல்ஒலி கொண்டு, செழுநகர் வரைப்பின்

நடுவண் எழுந்த, அடுநெய் ஆவுதி

இரண்டுடன் கமழும் நாற்றமொடு வானத்து,

நிலைபெறு கடவுளும் விழைதகப் பேணி (பாடல் 1: 10-15)

என்ற பாடலின் மூலம் குறிப்பிடுகின்றார்.

வேள்வியில் பற்றுடையவனாதலால், பாலைக் கோதமனார் விருப்பத்தை நிறைவேற்றியுள்ளான். கோதமனார் பாடிய ஒரே புறநானூற்றுப் பாடலான 366ம் பாடல் இவனை பற்றியதாகவே இருக்கவேண்டுமென்று குறிப்பிடுகிறார்கள்.

இவனுடைய குருவாக விளங்கியவர் நெடும் பாரதாயினார். இவன் வஞ்சி நகரிலிருந்து 25 ஆண்டுகள் சிறப்பாக ஆட்சி செய்த பின்னர் தன் குருவோடு காடு சென்று தவமியற்றி வீடு பேறு அடைந்ததாகக் கூறப்படுகிறது. இவனுடைய சிறப்புகளை பதிற்றுப்பத்துப் பாடல்கள் விரிவாக எடுத்துரைக்கின்றன.

**நான்காம் பத்து**

பாடியவர் - காப்பியாற்றுக் காப்பியனார்

இவர் காப்பியாறு என்னும் ஊரைச் சேர்ந்தவர். காப்பியக் குடியினராகவோ அல்லது காப்பியன் என்னும் இயற்பெயர் உடையவராகவோ இருக்கலாம் என்று கருதப்படுகிறது. தொல்காப்பியர் போன்றவர்கள் இந்த குடியை சேர்ந்தவர்கள் என்று வரலாறு கூறுகின்றது. இவரால் பாடப் பெற்றவன் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்ற சேர மன்னன். காப்பியனார் திருமாலின் திருத்துழாய் மாலையினையும், திருமால் வழிபாட்டு மரபையும் அழகாக கூறியுள்ளார்.

“வண்டன்” என்ற வள்ளல் இவருக்கு மிகவும் உதவியவர்களில் ஒருவன், இதனால் நார்முடிச்சேரலின் சிறப்பைக் கூறும் பொழுது வண்டனைப் பற்றியும் இவர் கூறியுள்ளார். நார்முடிச்சேரலின் நல்ல இயல்புகளையும் அவனுடைய மறமாண்புகளையும் மற்ற சிறப்புகளையும் இவர் மிகவும் நயம்படப் போற்றிக் கூறியுள்ளார். இவருடைய பாடலைக் கேட்டு மகிழ்ந்த அரசன் 40ஆயிரம் பொன்னும், தான் ஆள்கின்ற நாட்டில் ஒரு பாகத்தையும் கொடுத்து சிறப்பித்திருக்கிறான் என்பது வரலாறு.

**பாட்டுடைத்தலைவன் - களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்**

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் சேரலாதனுக்கும் வேளாவிக் கோமான் பதுமனின் மகளான பதுமன்தேவிக்கும் பிறந்தவன் என்று பதிகம் கூறுகின்றது .இவன் வஞ்சி நகரில் இருந்து 25 ஆண்டுகள் சிறப்பாக ஆட்சி புரிந்திருக்கின்றான். பூழிநாட்டின் மீது படையெடுத்துச் சென்று, கடம்பின் பெருவாயில் என்ற இடத்தில் நன்னனைச் தோல்வியடையச் செய்தது இவனுடைய வீரத்தைக் குறிக்கும் செயல்களில் ஒன்றாகும்.

“இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்,

பொலம்பூண் நன்னன் பொருதுகளத்து ஒழிய,

வலம்படு கொற்றம் தந்த, வாய்வாள்,

*களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல்"*

*-என்ற அகநானூற்றுப் பாடல் 199ல் புலவர் கல்லாடனாரும் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளார்.*

*போர்க் களங்களிலே பாய்ந்தோடிய குருதியாகிய சிவந்த வெள்ளம் யானைகளையும் இழுத்துச் செல்லுமாறு, பல பெரும் போர்களைப் புரிந்து, பகைவரை அழித்து வெற்றி கொண்டவன் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்பதை,*

*குருதிச் செம்புனல் குஞ்சரம் ஈர்ப்பச்*

*செருப்பல செய்து, செங்களம் வேட்டுத்*

*துளங்குகுடி திருத்திய, வலம்படு வென்றிக்,*

*களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலை (4ம் பத்து - பதிகம்)*

*- என்று காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய பத்து பாடல்கள் இவனது மறமாண்பை மட்டுமின்றி கொடைத்தன்மையினையும், சிறப்பான ஆட்சியையும் வெகுவாகப் போற்றுகின்றன.*



**ஐந்தாம் பத்து**

*பாடியவர் - பரணர்*

*இவரையும் கபிலரையும் சேர்த்து 'கபிலபரணர்' என்று சான்றோர்கள் போற்றுவது குறிப்பிடத்தக்கது. பரணர் பாடியது ஐந்தாம் பத்தின் பாட்டுடைத் தலைவனான சேரமன்னன் கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன்.. இவருடைய பாடல்கள் பல வரலாற்று நிகழ்ச்சிகளை நமக்கு உணர்த்துகின்றன. அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு ஆகிய சங்க நூல்களிலும் இவருடைய பாடல்கள் நிறையக் காணப்படுகின்றனறன. இவருடைய பாடல்கள் 70-க்கும் மேற்பட்ட பழந்தமிழ்த் தலைவர்களைப் பற்றிய செய்திகளை அறிவதற்கு உதவியாக உள்ளன. இவர் சேரன் செங்குட்டுவனின் மறமாண்பையும், அந்தக்காலத் தமிழ் மறவர் இமயம் முதல் குமரிவரை வென்று பேரரசு செலுத்தி வாழ்ந்திருந்த பெருமைமிக்க நிலையினையும், செங்குட்டுவனது வெற்றிச் செயல்கள் பலவற்றையும் எடுத்துக்காட்டியுள்ளார்.*

***பாட்டுடைத்தலைவன் - கடல் பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன்***

*இவனுடைய சிறப்புகளை பரணர் பாடும்போது,*

*"கின்னரப் பறவைகள், தங்கள் சிறகுகளை படபட வென்று ஆட்டி இசைக்கின்ற இன்னிசையையும் வென்ற, நரம்பிலிருந்து எழுகின்ற இசையோடு பொருந்த, இனிய குரலில் பாடும் விறலியருக்குப் பெண் யானையையும், வீரர்களுக்கு ஆண் யானையையும், தங்கள் தலைவன் போர் செய்து பகைவரை வென்ற போர்க்களத்தைப் பாடும் பாணர்களுக்கு குதிரையையும் கொடுத்தான்," என்பதை,*

*ஆடுசிறை அறுத்த, நரம்புசேர் இன்குரல்*

*பாடு விறலியர், பல்பிடி பெறுக,*

*துய்வீ வாகை, நுண்கொடி உழிஞை*

*வென்றி மேவல், உருகெழு சிறப்பின்,*

*கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக!*

*மன்றம் படர்ந்து, மறுகுசிறைப் புக்கு,*

*கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்*

*அகவலன் பெறுக மாவே! (பாடல் 3: 21-28)*

*(உருகெழு = அச்சம் தரும்; மள்ளர் = வீரர்; அகவலன் = பகைவன்)*

*--- என்று பாடியுள்ளார்.*

*இவன் ஆரிய அரசர்களை வீழ்த்தியவன் என்பதைக்*

*"ஆரியர் அலறத்தாக்கிப் பேரிசைத்*

*தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து,*

*வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்,"*

*--- என்று அகநானூறு 396வது பாடல் குறிப்பிடுகின்றது.*

*வஞ்சி நகரில் இருந்து 55 ஆண்டுகள் ஆட்சி புரிந்த செங்குட்டுவன் கடல்வழியாகப் படையெடுத்து பகைவரை வெற்றி கொண்டதை*

*"செருச்செய் முன்போடு முந்நீர் முற்றி,*

*ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஓட்டிய*

*நீர்மாண் எஃகம்'*

*--- என்று அகநானூற்றுப் பாடல் 212 சிறப்பித்துக் கூறுகிறது.*

*அதுமட்டுமின்றி சிலப்பதிகாரத்து வஞ்சிக்காண்டமும் இவனுடைய மறமாண்புகளைப் போற்றி உரைக்கின்றது.*

*செங்குட்டுவனே, கடவுள் பத்தினிக்குப் படிமம் அமைத்த மன்னனாவான்.*

*இவன் கரிகால் சோழப் பெருவளத்தான் காலத்தில் வாழ்ந்தவன் என்பதை பரணர் பாட்டுக்கள் அறிவுறுத்துகின்றன. இவனுடைய மகன் குட்டுவன் சேரல் என்பது பதிகத்தின் மூலமாக அறியக் கிடைக்கும் செய்தியாகும். இவன் இளவரசனாகியத் தன் மகனையேப் பரணருக்குப் பரிசாக தந்து மகிழ்ந்தான்.*

**ஆறாம் பத்து**



*பாடியவர் - காக்கைபாடினியார் நச்செள்ளையார்*

*''செள்ளை'' என்பது இவருடைய இயற்பெயர். 'விருந்து வரக்கரைந்த காக்கையது பலியே', என்று வரும் இவரது குறுந்தொகைச் செய்யுள் தொடரால் இவரை காக்கைபாடினியார் என்று கூறுகின்றனர். பெண்பால் புலவரான இவர் நுண்ணிய புலமையும், தமிழ் நலமும் சிறந்து விளங்கியவர். இளஞ்சேரல் இரும்பொறையின் தாய் வேண்மாள் அந்துவன் செள்ளை என்பவர். அதனால் காக்கைபாடினியாரும் அரசகுடியில் பிறந்தவராக இருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது.*

*இவர் ஆறாவது பத்தில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் பல விறலியரின் ஆடல் பாடல் இசை போல அக்கால*

*கலை மேம்பாடுகளை காட்டுவனவாக உள்ளன. மேலும், கடல் துறைகளின் தன்மையினைத் தெளிவாக வருணித்துக் காட்டியுள்ளார். அதனால் இவரை கடற்கரை நாட்டவர் என்றும் கருதுகின்றனர்.*

***பாட்டுடைத்தலைவன் - ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்.***

*ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் வேளாவிக்கோமான் மகளுக்கும் மகனாகப் பிறந்தவன். இவனுக்கு "வானவரம்பன்" என்ற பெயரும் உண்டு. இவன் வஞ்சி நகரில் இருந்து 38 ஆண்டுகள் சிறப்பாக அரசு புரிந்துள்ளான். மழவரைப் போரில் வென்றான். குழந்தையைக் காக்கும் தாயைப் போலத் தன் மக்களைப் பாதுகாத்தான். அறநெறியை விரும்பும் குணமுடையவன். இவன் அவையில் குமரி முதல் இமயம் வரையிலும் உள்ள அனைத்து அரசர்களும் சான்றோர்களும் கூடியிருந்தனர். அப்படி, அனைவரும் கூடியிருந்த ஒரு நேரத்தில் பாணர், விறலியர் ஆகியோரின் ஆட்டத்தையும் பாட்டையும் கேட்டு மகிழ்ந்திருந்தான். அதனைக் கண்ட இவனுடைய பகைவர்கள் சிற்றின்பத்தில் மூழ்கி நிற்கும் எளியவன் என்று இவனை நினைத்தனர்.*

*ஆனால், சேரலாதன், மேகங்கள் தவழும் பெரிய குன்றுகளில் வாழ்கின்ற நஞ்சினை உடைய பாம்புகளைத் தாக்கி அவற்றை அச்சமுறுத்தி, கடுஞ்சினத்தை உடைய அவற்றின் வலிமையை அழிக்கும் இடிமுழக்கத்துக்கு ஒப்பானவன் என்பதை காக்கைபாடினியார்,*

*"மழை தவழும் பெருங்குன்றத்துச்,*

*செயிருடைய அரவெறிந்து,*

*கடுஞ்சினத்த மிடல்தபுக்கும்*

*பெருஞ்சினை புயலேறு அனைய" (பாடல் 1: 25-28),*

*--- என்று அவனது வீரத்தைப் பாராட்டிப் பாடியுள்ளார்.*

*இவன் பிறருக்கு உதவி செய்து மகிழ்பவன். அதனால் இவனுடைய நாட்டில் வறியவர்கள் யாருமில்லாத போது, பிற நாடுகளுக்கு வறியவர்களைத் தேடிச் சென்று, அவர்களைத் தேரில் ஏற்றி வந்து விருந்தளித்து மகிழ்வான் சேரலாதன் என்பதை காக்கைப்பாடினியார்,*

*"வாரார் ஆயினும் இரவலர் வேண்டித்*

*தேரில் தந்தவர்க்கு ஆர்பதம் நல்கும்*

*நகைசொல் வாய்மொழி இசைசால் தோன்றல்" - (பாடல் 5:10-12)*
*என்று சிறப்பித்துள்ளார்.*

**ஏழாம் பத்து**

*பாடியவர் - கபிலர்*

*பதிற்றுப்பத்தில் உள்ள ஏழாம் பத்து பாடியவர் கபிலர். இவர் சேர மன்னன் செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பாடியுள்ளார். இவருடைய பாடல்களும் வரலாறும் தனித்து ஆராயவேண்டிய சிறப்பும் விரிவும் கொண்டவை. அந்தப் பெரும் பணியை நாவலர் வேங்கடசாமி நாட்டார் அவர்கள் செய்துள்ளார். அவருடைய நூலில் கபிலரின் வரலாறு பற்றி அனைத்து செய்திகளையும் தெரிந்து கொள்ள இயலும்.*

*கபிலர் குறிஞ்சித் திணை செய்யுட்களை யாப்பதில் மிகச்சிறந்து விளங்கியவர். ஐங்குறுநூற்றில் குறிஞ்சி பற்றிய நூறு செய்யுட்களும், குறிஞ்சிக்கலியும், குறிஞ்சிப்பாட்டும், அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகியவற்றில் குறிஞ்சி பற்றிய பல செய்யுட்களையும் இவர் இயற்றியுள்ளார். புறநானூற்றிலும் 28 பாடல்களை இவர் பாடியுள்ளார. பாரி மன்னனின் நெருங்கிய நண்பராக இருந்து அவனுடைய பெண்களுக்குத் திருமணம் செய்து வாழ்வளித்த பின்னர், வடக்கிருந்து உயிர்நீத்த ஒப்பற்ற நட்புக்கு உதாரணமாக இருந்தவர். பதிற்றுப்பத்து மட்டுமின்றி புறநானூற்றில் 8, 14-காம் பாடல்களிலும் இவர் செல்வக்கடுங்கோ வாழியாதனைப் போற்றிப் பாடியுள்ளார்.*



**பாட்டுடைத்தலைவன் - செல்வக் கடுங்கோ வாழியாதன்**

*செல்வக் கடுங்கோ வாழியாதன் இரும்பொறை மரபினன். சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறைக்கும் பொறையன் தேவிக்கும் மகனாகப் பிறந்தவன். இவன் வேள்விகள் இயற்றியும், அறம் பல செய்தும், கருவூர் நகரில் இருந்து 25 ஆண்டுகள் புகழுடன் அரசாட்சி செய்தான். இவனுடைய குணங்களைப் பற்றி ஏழாம் பத்தின்"அருவி ஆம்பல்" என்ற 3ம் பாடல் விளக்கிக் கூறுகின்றது. இவனுடைய ஆட்சியின் கீழ், நேரி மலை இருந்தது. அதனால் இவனை "நேரிபொருநன்" என்றும் அழைப்பார்கள்.*

*இவன் வேள்விகள் இயற்றி அறம் பல செய்ததைக் கபிலர்,*

*வலம்படு முரசின், வாய்வாள் கொற்றத்துப்*

*பொலம்பூண் வேந்தர் பலர்தில், அம்ம!*

*அறங்கரைந்து, வயங்கிய நாவிற் பிறங்கிய*

*உரைசால், வேள்வி முடித்த கேள்வி*

*அந்தணர் அருங்கலம் ஏற்ப நீர்பட்டு.*

*இருஞ்சே றாடிய மணல்மலி முற்றத்து (பாடல் 4:1-6)*

*என்று அவனிடம், "வெற்றிச் சிறப்புப் பொருந்திய வீர முரசையும், வாள் போரில் பெற்ற வெற்றியையும் உடைய வேந்தர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால், அறநெறிகளை உரைத்தபடி, வேள்விகளை இயற்றி முடித்த அந்தணர்களுக்கு, நீ வழங்கும் அணிகலன்களை அவர்கள் ஏற்றுக்கொள்ள, நீர் வார்த்துக் கொடுத்து வழங்குகிறாய். அப்படி எத்தனை பேருக்கு நீ வார்த்துக் கொடுத்தாயானால், கீழே விழுகின்ற நீரானது மண் நிறைந்த உன் அரண்மனை முற்றத்தில் விழுந்து முற்றம் முழுதும் சேறாகப் போகுமாறு செய்யும்," என்று வியப்பு பொங்குமாறு, செல்வக்கடுங்கோ வாழியாதன் வேள்விகள் பல செய்வதில் சிறந்து விளங்குகிறான் என்பதைப் போற்றிப் பாடுகின்றார்.*

*கபிலர் இவனை*

*'ஒடுங்கா உள்ளத்து, ஓம்பா ஈகைக்*

*கடந்தடு தானைச் சேரலாதன்"*

*--- என்று புறநானூறு 8ம் பாடலிலும் புகழ்ந்து பாடியுள்ளார்.*

*புலவர் குண்டுக்கண் பாலியாதனார் புறநானூறு 387ஆம் பாடலில் இவனைப் போற்றிப் பாடியுள்ளார். இவன் சிக்கற்பள்ளி போரில் உடல்துறந்து புகழ் பெற்றவன். இவருடைய மகன் "தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை" என்ற சேர மன்னன்.*

***எட்டாம் பத்து***

*பாடியவர் - அரிசில் கிழார்*

*அரிசில்கிழாரின் இயற்பெயர் தெரியவில்லை. இவர் அரிசில் என்னும் ஊரைச் சேர்ந்தவர். வேளாண் குலத்தவர். பெரும் புலமையும் அரசியல் அறிவும் உடையவர். பதிற்றுப்பத்தின் எட்டாம் பத்தில் 'தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைப்" பற்றிப் பாடியுள்ளார். அதுமட்டுமின்றி குறுந்தொகையின் 193வது பாடலையும், புறநானூற்றில் 146, 230, 281, 300, 304, 342-ஆம் பாடல்களையும் பாடியுள்ளார். தகடூர் யாத்திரைச் செய்யுள்களிலும் இவருடைய பாடல்களைக் காணமுடிகின்றது. இவர் இரும்பொறையின் அமைச்சராகவும், படைத்தலைவராகவும் கடமை புரிந்துள்ளார்.*

***பாட்டுடைத்தலைவன் - தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை***

*தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, செல்வக் கடுங்கோ வாழியாதன் என்பவனுக்கும் வேளாவிக் கோமான் பதுமன் மகளுக்கும் மகனாகப் பிறந்தவன். இவன் கருவூர் நகரில் இருந்து 17 ஆண்டுகள் ஆட்சி புரிந்துள்ளான். இவனது வரலாற்றை அரிசில் கிழாரின் எட்டாம்பத்து விளக்குகின்றது. இந்தச் சேர மன்னன், சோழர்களையும் பாண்டியர்களையும் ஒரே போரில் வென்றவன். அந்த மன்னர்களின் முரசுகள், குடைகள், அணிகள் போன்றவற்றை கவர்ந்தவன். வேள்விகள் பல செய்தவன்.*

*இவனுடைய வீரத்தைப்பற்றி அரிசில் கிழார்,*

*கடுந்தேறு உறுகிளை மொசிந்தன துஞ்சும்*

*செழுங்கூடு கிளைத்த, இளந்துணை மகாரின்*

*அலந்தனர், பெரும நின் உடற்றி யோரே! (பாடல் 1: 6-8)*

*என்ற பாடல் வரிகளில்,*

*‘குளவிக் கூட்டைக் கலைத்து விட்ட சிறுவர்கள் அவை தம்மைக் கொட்டிவிடப்போகின்றன என்று அஞ்சி எப்படி சிதறி ஓடுவார்களோ, அப்படி*



*உன்னிடம் போரிட வந்த உன் எதிரிகள் உன்னுடைய வீரத்தையும் போர்த்திறனையும் கண்டு அஞ்சி ஓடுவார்கள்,” என்று பெருஞ்சேரல் இரும்பொறையிடம் கூறுவதுபோல அவனுடைய வீரத்தைப் புகழ்ந்து பாடியுள்ளார்.*

*பெருஞ்சேரல் இரும்பொறை பற்றி நாம் கேள்விப்பட்டிருக்கக் கூடிய மற்றொரு நிகழ்ச்சி. ஒரு முறை மோசிகீரனார் என்ற புலவர், அரசனின் முரசுக் கட்டில் என்று தெரியாமல், அவருக்கிருந்த அசதியில் அதன் மீது படுத்து உறங்கி விட்டார். அதைக் கண்ட மன்னன், அவர் புலவர் என்பதை அறிந்து, அவர் விழித்து எழும் வரை அவருக்கு வெண்சாமரம் வீசி நின்றிருந்தான். தமிழுக்கும் தமிழ்ப்புலமைக்கும் அவன் அளித்த இந்த மதிப்பைப் போற்றி மோசிகீரனாரும் அவனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். ''பாலை பாடிய பெருங்கடுங்கோ'' என்று அழைக்கப் படுபவனும் இந்த மன்னனே என்று சான்றோர்கள் கூறுகின்றனர்.*



**ஒன்பதாம் பத்து**

*பாடியவர் - பெருங்குன்றூர் கிழார்*

*பெருங்குன்றூர் கிழார் பதிற்றுப்பத்தில ஒன்பதாம் பத்தைப் பாடியவர். பெருங்குன்றூர் கிழார் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூரைச் சேர்ந்தவர். வேளாண் மரபினர். இவர் பெயரைக் கொண்ட மற்றறொரு புலவர் பாடியது மலைபடுகடாம் என்பது குறிப்பிடத்தக்கது. இவர் சேர மன்னன் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையைப் பாடியுள்ளார். அதற்கு பரிசாக 32,000 பொற்காசுகளும், ஊரும், மனையும், வாழ்வதற்கு மலையும், அணிகலனும் பெற்றுள்ளார்.*

*''சுரும்பார் சோலைப் பெரும் பெயர்க் கொல்லி' என்று கொல்லிமலையைப் புகழ்ந்து பாடியுள்ளார். அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை ஆகியவற்றிலும் இவர் பாடிய பாடல்கள் காணப்படுகின்றன.*

# மொழிபெயர்ப்புக்கான கருப்பொருள் தெரிவில் ஒப்பீடும் முரண்பாடும்

***(முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி மொழிபெயர்ப்பியல் நுண் ஆய்விருக்கை மெய் நிகர் கூட்டத்தில் ஆற்றிய உரை- 27.4.23)***

***--முனைவர் திருமதி C. இராஜேஸ்வரி,***
*எழுத்தாளர், மொழிபெயர்ப்பாளர், பதிப்பாளர்.*



*ஒரு மொழியில் இருந்து இன்னொரு மொழிக்கு மொழிபெயர்ப்புச் செய்ய படைப்புகளைத் தெரிவு செய்யும்போது அவை மூல மொழிக்குத் தொடர்புடையவையாக இருந்தாலும் அல்லது மூலமொழிப் பண்பாட்டுக்கு முற்றிலும் வேறுபட்டதாகத் தோன்றினாலும் அவற்றை மொழிபெயர்ப்பு வாசகர்கள் விரும்புவர். எனவே இவற்றைத் தெரிவு செய்வது இயற்கை.*

*நான் ஆங்கிலக் கவிதைகளை தமிழில் மொழிபெயர்க்கும் போது இந்த அடிப்படையில் கருப்பொருளைத் தெரிவு செய்தேன். காதலும் வீரமும் உலகளாவிய கருப்பொருட்களாக இருந்தாலும் அவற்றை ஒவ்வொரு நாடும் பண்பாடும் மொழியும் வெளிப்படுத்துகின்ற விதம் வெவ்வேறாக உள்ளது. சங்க இலக்கியத்தில் காணப்படும் அகமும் புறமும் பிற மொழி இலக்கியத்தில் காணப்படும் அகமும் புறமும் சிற்சில அடிப்படைகளில் ஒன்றுபட்டும் பல்வேறு அடிப்படைகளில் வேறுபட்டும் அமைகின்றன. உணர்ச்சி ஒன்றாக இருந்தாலும் கருத்து வேறாக இருக்கும்.*

*காதலை வெளிப்படுத்துவதில் உள்ள ஒற்றுமை ஆங்கில மொழியில் இருந்து சில கவிதைகளை தமிழுக்கு மொழிபெயர்க்க என்னைத் தூண்டியது.*

*குறுந்தொகையில் வரும்*

***யாரும் இல்லை தானே கள்வன்***
***தானது பொய்ப்பின்***
***யான் எவன் செய்கோ***
***ஒழுகு நீர் ஆரல் பார்க்கும்***
***தினைத்தாளன்ன சிறு பசுங்கால***
***குருகும் உண்டு***
***யான் மணந்த ஞான்றே***

*என்ற பாடலில் குருகும் உண்டு யான் மணந்த ஞான்றே என்று தலைவி குறிப்பிடுவதைப் போல ஜெர்மனியில் எழுதப்பட்டு ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட ஒரு பாடலிலும் குருவியும் உண்டு யான் மணந்த ஞான்றே என்ற கருத்து இடம் பெறுகிறது.*

*இரண்டு பாடலுக்கும் அடிப்படையாக அமைந்த காட்சி ஒன்றுதான் என்றாலும் இரண்டிலும் வெளிப்படுத்தப்படும் பெண்ணின் உணர்வுகள் நுட்பமாக வேறுபடுகின்றன. தமிழில் குறுந்தொகைத் தலைவி ஆரல் மீனை தன் உணவுக்காக பார்த்துக் கொண்டிருக்கும் குருகு நம்மைப் பார்த்திருக்குமா நமக்கு வந்து சாட்சி சொல்லுமா என்று குருகை நினைத்துக் கலங்குகிறாள். ஏனென்றால் அவளுடன் களவுப் புணர்ச்சி கொண்டவன் இப்போது அவளைத் திருமணம் செய்ய மறுக்கிறான்.*

***பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்/***
***ஐயர் யாத்தார் கரணம் என்ப***

*என்ற தொல்காப்பிய நூற்பா இவ்வாறு ஆண்மகன் இவளை அறியேன் என்று பொய்யுரைத்த போது சமூகத் தலைவர்கள் ஒரு சடங்கை உருவாக்கினர். அது தான் திருமணம் எனப்பட்டது என்பதை விளக்குகிறது. இங்குத் தலைமக்களின் காதல் கூட்டம் நடைபெற்ற வேளையில் குருகு மட்டுமே அந்த இடத்தில் காணப்பட்டது. குருகு என்பது ஒரு கொக்கு வகையினது. குருகு மணலுக்குள் புதைந்திருக்கும் மிகச் சிறிய மீனான ஆரல் மீனை, ஓடிவரும் நீரில் தேடி உண்பதற்காக அந்த மீனின் வருகையை உற்று நோக்கிக் கொண்டிருக்கிறது. எனவே அக் குருகு இவர்களை பார்த்து இருக்க வாய்ப்பில்லை.*

*இப்பாடல் பின்னர் 16ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட திருவிளையாடல் புராணத்தில் குருகுக்கு பதிலாக இருவரும் தனித்திருந்த கிணற்றடியும் அதன் அருகே காணப்பட்ட வன்னி மரமும் அவன் அவளை அறியேன் என்று பொய் உரைத்த போது நியாய சபையில் வந்து சாட்சி கூறுமா என்று வினா எழுந்தது. அப்போது வஞ்சிக்கப்பட்ட அப்பெண் மதுரை சொக்கநாதரை வணங்கவும் அவ்விரண்டும் வந்து சாட்சி உரைத்ததாக திருவிளையாடல் புராணம் கூறுகின்றது. இதற்கு அடையாளமாக மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்குள் பைரவர் சன்னதிக்கு முன்பு இரண்டு அடி உயர கல்லால் ஆன ஒரு மரம் சிலை வடிவிலும் அதன் முன்பு ஒரு கிணறும் அமைக்கப்பட்டுள்ளது.*

*ஜெர்மன் நாட்டில் எழுதப்பட்ட கவிதையில் தலைமக்கள் இருவர் இணைந்திருந்த போது அங்கு எவரும் தங்களை பார்க்கவில்லை என்ற மன நிம்மதியுடன் எழுந்த இளம் பெண் ஒரு பறவை மட்டும் அங்கு தண்டரடெய் என்று கத்தி கொண்டிருப்பதைக் கவனிக்கிறாள். இது ஒரு வேளை நம்மைப்*

பார்த்திருக்குமோ என்ற ஒரு வினாவை தனக்குள் எழுப்பி அவ்வாறு பார்த்திருந்தாலும் இது ஊர் முழுக்க போய் நம்மை பற்றிச் சொல்லாதல்லவா என்ற ஒரு நிம்மதிப் பெருமூச்சு விடுகிறாள். இத்துடன் இக் கவிதை நிறைவு பெறுகிறது.



ஆக இரண்டிலும் ஒரே காட்சி. தலைமக்களின் காதல் நிகழ்ச்சி அங்கு இருந்த ஒரு பறவை. இவர்கள் மூன்று பேரும் தான் நிகழ்வில் தொடர்புடையவர்கள். ஆனால் குறுந்தொகை தலைவி அந்தப் பறவை வந்து தனக்கு சார்பாக சாட்சி சொல்ல வேண்டும் என்று ஏங்குகிறாள். ஆங்கிலக் கவிதையில் பறவை எங்கும் போய் தங்களை பற்றி சொல்லிவிட கூடாதே என்று அஞ்சுகிறாள்.

ஆங்கிலக் கவிதை காமதேவனின் குரலில் தொடங்கி அப் பெண்ணின் குரலில் தொடர்ந்து மீண்டும் காமதேவனின் குரலில் நிறைவுறுகிறது.

***'எலுமிச்சை மரத்தடியில், டெய்சி மலர் தரையில், எனக்குத் தெரிந்த இருவர்,***

***படுக்கை அமைத்தனர்.***

***உதிர்ந்து நொறுங்கிய, பூக்களும் புட்களும், குவிந்தும் சிதறியும் கிடக்கக் காணலாம்.***

***எல்லாமே சமவெளியின் அடர்ந்த***
***பொதும்பருக்குள் தான்***

***'தண்டர டேய்'***
***இரவுச் சிட்டின் இன்னிசை கேட்டது***

***நான் புல்வெளியில் கால் வைத்த போது***

***அங்கு யாரோ யாருக்காகவோ காத்திருந்தார்***

***அருள் நிறைந்த பெண்ணே***
***அங்கு ஓர் சந்திப்பு நிகழ்ந்தது'***

*காதலி*

***'எனக்கு எவ்வித சுகமும் இல்லை,***
***அவனோ ஆயிரம் முத்தங்கள் பெற்றான்,***
***என் உதடுகளைப் பார், எப்படிச் சிவப்பாய்த் தெரிகின்றன, இலைகளையும் மலர்களையும்,***
***இழுத்து போட்டு மெத்தினான்,***
***ஒரு படுக்கைக்காக.***

***பசுமையானது உயரமானது மென்மையானது***
***பார்த்து பார்த்துச்***
***சின்ன சிரிப்பைச் சிந்தினான்***

***பூங்கொடி வளைவைக் கடந்து போய்***
***புல்லை நன்றாக அழுத்தி விட்டான்***
***நசுங்கிய ரோஜாக்கள் சிரித்தன***

***தண்டரடேய்***

***அங்கு நான் தலை சாய்த்தேன்,***
***இந்தக் காதல் பாதை வழியே,***
***யாரேனும் போயிருந்தால்,***
***எனக்கு எவ்வளவு வருத்தமும் அவமானமும்,***
***நாங்கள் அந்த பசியப் புல் வெளியில்,***
***என்ன செய்து கொண்டிருந்தோம் என, எவரும் அறியார்***

***எனக்கும் என் காதலனுக்கும்,***
***அந்த இரவுச் சிட்டுக்கும் தவிர,***

***'தண்டரடேய்'***
***சிட்டு யாரிடமும் போய் சொல்லாதென்று நினைக்கிறேன்***

*ஜெர்மன் நாட்டுக் காதலி இந்தப் பறவை தன்னைப் பற்றி தங்களின் காதல் உறவைப் பற்றி வெளியே சொல்லிவிடக்கூடாது எனக் கலங்குகிறாள்.*

*காட்சி ஒன்று கருத்து வேறு நிகழ்ச்சி ஒன்று உணர்ச்சி வேறு என்று இருக்கும் இந்த இரண்டு பாடல்களையும் ஒப்பிட்டு ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட ஜெர்மன் பாடலை நான் என் மொழிபெயர்ப்புக்குத் தெரிவு செய்தேன்.*

*குறுந்தொகையில் ஒரு பெண் தன்னுடைய காதலைப் பற்றிச் சொல்லும் பொழுது அதன் அளவை மிகைப்படுத்தி இதற்கு மேல் மிகைப் படுத்த இயலாது என்ற அளவுக்குச் சொல்லுகிறாள்.*

***நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று, நீரினும் ஆரளவின்றே, கருங்கோற் குறிஞ்சிப் பூ கொண்டு,***
***பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே***

*என்ற பாடலில் அவள் கூறிய*

*வானினும் உயர்ந்தன்று , நீரினும் ஆரளவின்றே*

*என்ற உவமை ஓர் ஆங்கிலக் கவிதையிலும் இடம் பெற்றிருந்தது. அதுவும் என் மனதைக் கவர்ந்ததனால் அதனை மொழிபெயர்க்கத் தெரிவு செய்தேன். இக்கவிஞர் காதலின் இயல்புகளை அதி அற்புதமாக விளக்குவார்.*

***காதல் மறதியை விட தடிமன்***
***நினைத்துப் பார்ப்பதை விட மெலிவு***
***அலையின் ஈரத்தை விட அருமை***
***தோல்வியை விட நெருக்கம்***
***அலை கடலை விட பைத்தியக்காரத்தனமானது***
***அப்படி இல்லை என்றும் சொல்லலாம்***



***ஆனால்***
***கடலை விட ஆழம் கடலை விட ஆழம்***

***காதல் எப்போதும், ஜெயிக்கத் துடிக்கும்,***

***அது ஆரம்பத்தை விட பெரியது,***
***மன்னிப்பை விட கொஞ்சம் சிறியது,***

***சூடானது***
***பித்தம் நிறைந்தது***
***ஆனால் சாகவே சாகாது***

***வானத்தைப் போன்றது அதைவிட உயரமானது.***

*இக் கவிதையில் குமிங்ஸ் என்ற கவிஞர் காதலைப் பற்றி விளக்கும் போது கடலை விட ஆழமானது; வானத்தை விட உயரமானது என்று மிகை உணர்ச்சியுடன் புனைந்து உரைக்கின்றார். இவை தவிர இன்னும் பல வகையில் அவர் காதலை விளக்குகிறார்.*

*ஒப்பீட்டு அளவில் வானமும் கடலும் தமிழ் குறுந்தொகைப் பாடலோடு இணைந்து செல்கின்றன. இவை தவிர மறதியை விட தடிமன் என்ற வரி - மறந்து போவது - மரத்துப் போவது -உணர்ச்சியற்றுப் போவது போன்ற தொடர்களோடு தடித்த தோல் என்ற தொடரையும் நாம் பேச்சு வழக்கில் கேள்விப்பட்டிருக்கிறோம். எனவே மறதியை விட தடிமன் என்ற வரி*

*காதலர்களுக்கு எந்த விதப் புத்திமதி சொன்னாலும் அது எடுபடாது என்ற பொருளில் அவர்கள் தங்கள் காதலைத் தொடர்ந்து கொண்டு தான் இருப்பார்கள். ஏனென்றால் அது நினைத்துப் பார்ப்பதை விட மெலிவு மென்மையானது ஒவ்வொருவருக்கும் நினைவுகள் சுகமானவை அந்த நினைவுகளை விடச் சுகமானது மென்மையானது காதல் என்கிறார் குமிங்ஸ்.*

***அலையின் ஈரத்தை விட அருமையானது, தோல்வியை விட மனதுக்கு நெருக்கமானது.***

*வெற்றி பலரோடும் பங்கு போடக் கூடியது ஆனால் தோல்வியோ அவமானமோ குறிப்பிட்ட நபருக்கு மட்டுமே உரியது என்பதனால் தோல்வியை விட நெருக்கமானது காதல் என்று மனித உணர்வுகளோடு இணைந்து காதலை புனைந்துரைக்கிறார்.*

*அலைகடலை விட பைத்தியக்காரத்தனமானது என்ற வரியை ஏன் இப்படி ஏன் இப்படி பைத்தியக்காரனைப் போல் அலைகிறாய் என்ற தொடரோடு இணைத்துப் பார்த்தால் தெளிவாக புரியும். குறிக்கோளற்றுத் திரியும் ஒருவன் போல அலை வந்து வந்து போகிறது. அதுபோல காதல் நினைவுகள் ஒருவர் மனதில் வந்து வந்து செல்கின்றன.*

***காதல் எப்போதும் ஜெயிக்கத் துடிக்கும்;***
***ஆரம்பத்தை விடப் பெரியது;***
***மன்னிப்பை விடச்***
***சிறியது;***

*மன்னிப்பு என்பது ஒருவர் தன்னைத்தானே தாழ்த்திக் கொண்டு எடுக்கும் முடிவாகும். ஆக அது எளிமையானது சிறுமையானது. அந்த சிறிய நிகழ்வைவிட சிறியது - கொஞ்சம் சிறியது காதல்.*

*காதல் எளிமையானது பெருமையானது மென்மையானது அருமையானது பைத்தியக்காரத்தனமானது மற்ற எவர் சொல்லையும் கேட்காத அளவுக்கு தடிமனானது அல்லது உறுதியானது என்று குமின்ஸ் காதலைப் பல்வேறு மனித உணர்ச்சிகளோடும் இயல்புகளோடும் இணைத்துப் பாடியுள்ளார் இந்தப் பாடல் குறுந்தொகைப் பாடலோடு ஓரிரண்டு உவமைகளில் ஒப்பிட்டு இணைத்தும் மற்றவற்றில் வேறுபட்டும் விளங்குவதால் இந்தப் பாடலையும் நான் என்னுடைய மொழிபெயர்ப்புக்குத் தெரிவு செய்தேன்.*

***வீரம்***

*போர், வீரம் ஆகியன மனித குல வரலாற்றில் தொடர்ந்து வெவ்வேறு வடிவில் இருந்து வருவதைக் காணலாம். போர் குறித்து நான் இரண்டு பாடல்களை*

*இங்குக் குறிப்பிட விரும்புகின்றேன். ஒன்று ஒரு தனி மனிதனின் உணர்ச்சி மற்றொன்று ஒரு சமூகத்தின் பொதுக் கருத்தியல்.*

*ஒரு போர் வீரன் போரில் ஈடுபட்டு சோர்ந்து போய் வரும்போது அவனுடைய மன உணர்வுகளை விரித்துரைக்கும் கவிதை என் நெஞ்சில் லேசான வலி என்ற மைக்கேல் மேக் எழுதிய கவிதை ஆகும். இந்த கவிதை ஒரு தனி மனிதன் வீரனாக இருந்தாலும் அவன் தாய்க்கு மகனாகவும் மனைவிக்கு கணவனாகவும் எப்போதும் அவன் மனதுக்குள் அந்த உணர்வுகளோடு இருந்து வருகிறான் என்பதை வெளிப்படுத்துகின்றது.*



***"அந்த மரத்தின் கீழே,***
***ஓர் இளைஞன் போர் வீரன் அமர்ந்திருந்தான்.***
***அருகே நான் சென்றபோது, கையசைத்து அழைத்தான். போர் விடிய விடிய நடந்தது,***
***இன்னும் பலர் விடியலைப் பார்க்காமல்,***
***தரையில் விழுந்து கிடக்கின்றனர், என்றான்.***

***'நான் உங்களுக்கு உதவட்டுமா' என்றேன், முடிந்தவரை புன்னகைத்தான்,***
***"இந்தக் காலை வேளையில்,***
***ஒரு மடக்குத் தண்ணீர் கிடைத்தால் நல்லது.***
***இரவு பகல் முழுக்கப் போரிட்டோம்,***
***ஓய்வேயில்லை.***
***நெஞ்சு லேசாக வலிக்குது, அதனால் கொஞ்சம் தண்ணீர்' என்றான்***
***அவனைப் பார்த்தபோது, அவன் சட்டையில் பெரிய ரத்தக்கறை,***

***ஆசிய நாட்டு அழுக்குடன், சூடான ரத்தம் கலந்து,***
***அடர் சிவப்பாக_ 'மற்றவர்களை விட நான் கொஞ்சம் அதிஷ்டசாலி, அவர்களெல்லாம் இறந்துவிட்டனர்,***
***எனக்கு நெஞ்சில் மட்டும் லேசான வலி'***

*அதாவது இவனுக்கு வரப்போகும் மரணம் குறித்து எதுவும் தெரியாமல் பேசுவதாக அமைந்த கவிதை இது. அந்த நெஞ்சு வலி தான் அவன் உயிரைப் பறிக்கப் போகிறது என்ற உண்மையை உணராமல் மற்றவர்கள் எல்லாம் அதிர்ஷ்டம் கெட்டவர்கள் என்றும் தான் ஒரு அதிர்ஷ்டசாலி என்றும் நினைத்துக் கொண்டு பேசுகிறான். அவன் இறக்கப் போகிறான் என்பது வாசகருக்குத் தெரியும். ஆனால் அவனுக்குத் தெரியாது இதுதான் இந்தக் கவிதையில் படர்ந்து இருக்கும் அடர்ந்த சோகமாகும்.*

***'எனக்கு வயதாகிறது போல,***
***அதனால் கொஞ்சம் மயக்கம்,***
***வெயில் சுள் என்று அடிக்கிறது,***
***ஆனால் எனக்கு குளிர்கிறது ,***
***200 அடி மலையில் ஏறினோம்,***
***அங்கிருந்து கீழே வரும் போது,***
***இரவு நெருங்கிவிட்டது,***
***என் நெஞ்சில் லேசான வலி***

***என்னிடமிருந்து தண்ணீரை,***
***நான் கொடுத்ததும்,***
***'நன்றி ஐயா' என்றான். புன்னகை செய்தான், அத்தகைய பளிச்சென்ற சிரிப்பை,***
***அதற்கு முன் நான் கண்டதே இல்லை.***

***'என்னைப் போன்ற***
***உடல் வலிமையும் உற்சாகமும் உடையவன்,***
***லேசான நெஞ்சுவலியிடம், தோற்றுப் போவது, முட்டாள்தனமாக தோன்றுகிறது',***

*அதாவது அவனுக்கு உடல் வலிமையும் உண்டு மனதில் உற்சாகமும் உண்டு என்ற நம்பிக்கையில் பேசுகிறான். போர் அவனுக்கு சலிப்பையோ வெறுப்பையோ தரவில்லை என்பதை இதனால் அறியலாம். இதற்கு அடுத்து அவன் சொல்வது தான் ஒரு தனி மனிதன் என்ற உணர்ச்சியில் ஒரு ஆண்மகன் என்ற நினைப்பில் அவனுடைய கருத்தை புலப்படுத்துகிறது*

***தன் கணவன் வீரன் பலசாலி என்று, நினைத்துக் கொண்டிருக்கும் என் மனைவி,***

***நிற்கக் கூட இயலாமல் இங்கே அமர்ந்திருக்கும் என்னைப் பார்த்தால் என்ன நினைப்பாள்?***

***அடுத்தது***

***தன் மார்பில் எடுத்துப் பாலூட்டிய என் தாயார், நெஞ்சுவலி தாளாமல்***

***ஒரு நாள் இங்கே உட்காருவேன் என்று, நினைத்திருப்பார்களா?***

*என்று அவன் சொல்லும்போது ஒரு குடும்பத் தலைவன் தன் மனைவியின் கம்பீர சிந்தனைக்கு உரியவனாக இருக்க வேண்டும்; தன் மனைவி அவனை கம்பீரமானவனாக பெருமிதம் கொண்டவனாக நினைக்க வேண்டும் என்ற எண்ணம் அவன் மனதுக்குள் ஆழமாக பதிந்திருப்பதை உணர்த்துகிறது.*

*அடுத்து அவன் தாயாரின் கவலையை அவன் நினைத்துப் பார்க்கிறான் என்றைக்காவது என் தாயார் நான் இப்படி ஒரு இடத்தில் அனாதையாக நெஞ்சுவலியோடுஉட்கார்ந்து இருப்பேன் என்று நினைத்து இருப்பார்களா என்று அவன் தாயாரின் வேதனையை நினைத்து மறுகுகிறான்.*

*இந்த கவிதை அவன் மரணம் வரை நீண்டு கொண்டே போகிறது ஆனால் இக் கவிதையில் உடல் வலிமையும் மன உற்சாகமும் கொண்டவன் இரவு முழுக்க போரிட்டவன் அவனுடைய இறுதிக் காலத்திலும் சற்றும் மனம் தளராமல் தன் மனைவியையும் தாயாரையும் நினைத்து வருந்தி தன் நெஞ்சில் லேசான வலி தான் மற்றவர்கள் எல்லாம் இறந்து விட்டார்கள் நான் பிழைத்துக் கொண்டேன் என்ற ஒரு நம்பிக்கையுடன் பேசுவது வியப்பான ஒரு கருத்தாக இருக்கிறது. வாசிப்பவருக்கு அது வேதனையான உணர்ச்சியை வெளிப்படுத்துகிறது.*

*அடுத்து இன்னொரு கவிதையில் போர் பற்றிய சமூகக் கருத்தியல் வெளிப்படுகிறது. பொதுவாக போரில் அதிகமானோர் இறந்து போனாலும் கூட வெற்றி பெற்றவர்கள் அந்தப் போரை ஒரு மாபெரும் வெற்றி என்று சொல்லுவார்களே தவிர அதில் இத்தனை ஆயிரம் பேர் இறந்து போனார்கள் என்று கவலைப்படுவது கிடையாது. இறந்து போனவர்களின் மண்டையோடுகள் உழுகின்ற கலப்பையில் தட்டுப்படும்போது அவற்றைத் தூக்கி எறிந்து விட்டு அவர்கள் வெற்றியைப் பற்றி தான் பிரமிப்பாக பேசுவார்கள். எவரும் இறந்து போன வீரனுக்காக கண்ணீர் விடுவதோ கவலைப்படுவதோ கிடையாது. சமூகத்தின் வெற்றி குறித்த பொது கருத்தியலை ராபர்ட் சூதி எழுதிய அது ஒரு மாபெரும் வெற்றி என்ற கவிதையின் வழியாக அறியலாம்.*

***கோடை காலத்து மாலைப்பொழுது, பெரியவர் கேஸ்பரின் வேலைகள் முடிந்தன,***
***வீட்டு வாசலில் வெயிலில் அமர்ந்திருந்தார்,***
***எதிரே புல்வெளியில், பேத்தி வில்லியமின் விளையாடினாள்.***

***அவள் தன் அண்ணன் பீட்டர்க்கின்,***
***பெரிதாக உருண்டையாக, எதையோ உருட்டிக் கொண்டு,***
***வருவதைக் கண்டாள்.***

***சிற்றாற்றின் அருகே விளையாட்டில் கண்டெடுத்தான்,***
***பெரிதாக உருண்டையாக வழுவழுவென்று, பெரியவர் அதை, அவனிடமிருந்து வாங்கினார்.***
***பெருமூச்சுடன் தன் தலையை குலுக்கினார். யாரோ ஒரு ஏழைப் பட்டவனின் மண்டையோடு, மாபெரும் வெற்றிக்காக விழுந்து மாண்டான், என்றார்***

***தோட்டத்தில் கண்டெடுத்தேன்***
***அங்கு ஏராளமாய் கிடக்கின்றன.***
***உழும்போது ஏர்க்காலில் தட்டும்***
***அவர் 'ஆம் மாபெரும் வெற்றிக்காக ,ஆயிரமாயிரம் ஆக மாண்டனர் என்றார்.***



*அதாவது ஒரு மாபெரும் வெற்றிக்கு இறந்து போன ஆயிரக்கணக்கான வீரர்கள் குறித்து தனிநபர்கள் கவலை கொள்வதில்லை. ஆனால் அந்த மாபெரும் வெற்றியை குறித்துப் பெருமிதம் கொள்கின்றனர் என்பதை இக்கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன.*

***தாத்தாவிடம் சிறுவன் பீட்டர்கின் கெஞ்சினான், வில்யமின் பாப்பா ஆச்சரியக் கண்களுடன் அண்ணாந்து பார்த்தாள், 'எதற்காக போரிட்டனர் எல்லாம் விளக்கமாக சொல்லுங்கள்'.***

***ஆங்கிலேயர் பிரெஞ்சுக்காரர்களை முறியடித்தனர்,***
***எதற்காக எதிர்த்துப் போரிட்டனர்,***
***அது எனக்குச் சரியாக தெரியவில்லை,***
***ஆனால் எல்லோரும் சொன்னார்கள்,***
***அது ஒரு மாபெரும் வெற்றி***

***'என் தந்தை அப்போது பிளன்ட்ஹேமில் இருந்தார்,***
***சிறிய ஆற்றோடை அருகே இருந்த ,***
***அவர் வீட்டைக் கொளுத்தினர்,***
***உயிருக்காகப் பயந்து ஓடினார்.***
***மனைவி மக்களோடு தப்பித்தார்,***
***அல்லது அவர்களும் இங்கு ஓய்வு பெற்றிருப்பர்.***

*இன்றைக்கு மாபெரும் வெற்றி என்று சொல்லும் இந்த கேஸ்பருடைய தந்தையும் இந்த போரில் இறந்திருக்க வேண்டியவர். இவரும் இறந்திருக்க வேண்டியவர். ஆனால் என்னவோ இவர்கள் பிழைத்துக் கொண்டனர். ஆனாலும் இந்த போரின் வெற்றியை மாபெரும் வெற்றி என்று சமூகத்தின் குரலை இவரும் எதிரொலிக்கின்றார்.*

***நாடு முழுக்க ரத்தமும் நெருப்பும் தான், பிள்ளைத்தாய்ச்சிகளும் மாண்டனர்,***
***பிறந்த சிசுவும் செத்து மடிந்தது,***
***ஆனால் உனக்குத் தெரியுமா***
***எல்லா மாபெரும் வெற்றியிலும் இது உண்டு.***

*ஆக ஒரு மாபெரும் வெற்றி என்பது அரசனின் வெற்றி என்றுதான் போற்றப்படுகிறது தவிர பொதுமக்களின் சாவு என்று பொதுமக்களில் ஒருவர் கூட அதை உணர்வது கிடையாது. இவ்வாறாக இந்த கவிதை போய்க் கொண்டிருக்கிறது திரும்பத் திரும்ப இக்கவிதையில் சொல்லப்படும் ஒரு வரி அது ஒரு மாபெரும் வெற்றி. சமூகத்தின் நோக்கத்தைப் பற்றிய செயல்பாடுகளில் தனிமனிதனின் சுக துக்கங்கள் பெரிதாக்கப்படுவதில்லை. கவனிக்கப்படுவதில்லை. என்பதைப் போர் பற்றிய கவிதைகள் விளக்குகின்றன.*

காதலைப் பற்றிய இந்தக் கவிதைகளும் போர் பற்றிய இக்கவிதைகளும் எனக்குச் சற்று விசித்திரமாக தெரிந்ததனால் நான் இவற்றைத் தெரிவு செய்து மொழிபெயர்த்தேன். இதுபோல தகைவிலான் குருவி, நத்தை, வெட்டுக்கிளி போன்றவற்றைப் பற்றிய கவிதைகளும் எனக்கு வியப்பூட்டின. வெட்டுக்கிளியால் பயிர்கள் சேதம் அடையும் என்று உழவர்கள் அவற்றை வெறுப்பதுண்டு. வெட்டுக்கிளியைப் பத்து வாதைகளில் ஒன்றாக விவிலியம் குறிப்பிட்டுள்ளது. ஆனால் அதனை உழவனின் நண்பன் வசந்தத்தின் வரவு என்று ஆங்கிலக் கவிஞர்கள் வியந்து பாடியிருப்பது வியப்பூட்டியது. அவற்றையும் மொழிபெயர்த்தேன்.




நான் சிறுவயதில் படித்த டேஃபடில்ஸ், அபூ பன் ஆடம், சாலிட்யூட் ரிப்பர் போன்ற கவிதைகள் என் மனம் கவர்ந்தவை. என்னுடைய உள்ளத்தில் மிக நீண்ட காலமாக அவை ஆழமாக பதிந்திருந்ததனால் அவற்றையும் நான் என்னுடைய மொழிபெயர்ப்பின் கருப்பொருட்களாகத் தெரிவு செய்தேன். மாயா ஏஞ்சலாவின் பெண்ணியக் குரல் கிரேக்கக் கவிதாயினி சாஃபோவின் தனிமனித உணர்ச்சி வெளிப்பாடுகள் ஆகியவை தமிழில் உள்ள அவ்வையார் வெள்ளிவீதியார் போன்றவர்களின் உணர்ச்சிப் பாடல்களோடு ஒத்துக் காணப்பட்டதனால் அவையும் என்னுடைய மொழிபெயர்ப்பின் கருப்பொருட்களாயின. இவ்வாறாக பல்வேறு அடிப்படையில் பல்வேறு காரணங்களைக் கொண்டு பல ஆங்கிலக் கவிதைகளைத் தெரிவு செய்து அவற்றைத் தமிழில் மொழிபெயர்த்தேன்.

# பண்டைத் தமிழ்ச் சமூக விளையாட்டுகளும் நவீன கால விளைவும்



**ம. ஆச்சின்.**

*முதுநிலைப் பட்டய தொல்லியல்,*
*முதலாம்ஆண்டு மாணவர்,*
*தமிழ்நாடு தொல்லியல் துறை,*
*சென்னை எழும்பூர்.*

**முன்னுரை**

*பண்டையத் தமிழ்ச் சமூக இயல், இசை, நாடகம், கலை, விளையாட்டுகள் போன்ற பல்வேறு அங்கங்களின் பண்பாட்டுத் தூண்களாகத் திகழ்கின்றனர்.*

*"கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு"*

*- (தொல்.சொல்.8:23)*

*மனிதர்களின் வாழ்க்கை முறையில் தொல்காப்பியர் காலத்திற்க்கு முன்பே விளையாட்டு மக்களிடையே தொடர்பில் இருந்துள்ளன என்று இப்பாடல் எடுத்துரைக்கின்றன.*

*அவ்வாறான விளையாட்டுகளை நாம் பொழுது போக்காக எடுத்துக் கொண்டாலும் இயற்கையான நேரடி கள ஆட்டங்கள் மூலம் விளையாடும் விளையாட்டுகள் உடல் ஆரோக்கியத்திற்கு உதவியாக இருக்கின்றன. இதனால், நேரடி தொடர்பும் பழக்கவழக்கமும் புதிய நட்புறவும் விளையாட்டுகள் ஏற்படுத்தித் தருவதில் வாய்ப்பில்லை. ஆனால், செயற்கையான நவீன கால கைபேசி இணையதளம் மூலம் விளையாடப்படும் விளையாட்டுகள் மனிதனின் ஆரோக்கியத்திற்கு பாதிப்பை விளைவிக்கிறது மற்றும் இனிமையில் வாழ்ந்து வந்த மனிதனை தனிமையில் இரு இடத்தில் ஒரே சிந்தனையில் மன உளைச்சலை ஏற்படுத்தும் வகையில் முடங்கவைக்கிறது. இவை மட்டுமல்ல சங்க இலக்கியங்களில் இடம் பெறும் தமிழரின் விளையாட்டுகள் அடையாளங்கள் நினைவுகள் இணையதள விளையாட்டுகளால் மறைந்து கொண்டே வருகிறது. எனவே இக்கட்டுரையானது இயற்கை சார்ந்த உடல் நலத்திற்க்கு ஆரோக்கியத்தை ஊட்டும் விளையாடுகளைப் பற்றி அந்நினைவுகளை மீட்டெழுப்பச் செய்யும் வகையில் நோக்கச் சான்றாக எடுத்துரைக்கின்றன.*

***பண்டைத் தமிழ்ச் சமூக விளையாட்டுகள்***

*ஒரு மொழி எவ்வாறு தொன்மை வாய்ந்ததோ அதைப் போன்று அந்த நாட்டின் விளையாட்டுகளும் தொன்மை வாய்ந்தன என்பது முனைவர் சு.சக்திவேல் அவர்கள் கூற்று. எனவே அவ்வாறான விளையாட்டுகளை இனி காணலாம்.*

1. ***சல்லிக்கட்டு***

*தமிழ்நாட்டு ஆடவர்களால் விரும்பிப் பங்கேற்க்கக் கூடிய விளையாட்டு சல்லிக்கட்டாகும். இவ்விளையாட்டு தமிழர் திருநாளான பொங்கல் விழாவையொட்டி சல்லிக்கட்டு விளையாட்டுப் பெருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது.*



*பண்டைத் தமிழ்ச் சமூக மக்கள் இந்த சல்லிக்கட்டு விளையாட்டை மகளிரை மணக்க தேர்வு செய்யும் நோக்கம் கொண்ட விளையாட்டாக அமைந்திருக்கிறது. இவ்விளையாட்டுக்கு மஞ்சுவிரட்டு, மஞ்சு வெருட்டு,காளைப் பிடித்தல்,காளைப் போர்,சல்லிக்கட்டு எருதுபிடித்தல், என பலவாறு பெயர்களால் பல்வேறு விதங்களில் கொண்டாடப்பபட்டிருக்கின்றன. அவை மட்டுமல்ல சங்க இலக்கியத்தில் ஏறுதழுவுதல் பற்றிய குறிப்புகள் இடம் பெறுகிறது என்பதை கீழ்க்கண்டவாறு காணலாம்.*

*"எழுந்தது துகள்*
*ஏற்றனர் மார்பு*
*கவிழ்ந்தன மருப்பு*
*கலங்கினர் பலர்.*
*(கலி.102:21-24)*

*இப்பாடல், காளைகளால் மண்ணின் துகள் எழுந்தது, பொதுவர் தம் மார்பினை முன்னிறுத்திப் பாய்ந்தனர், காளையின் கொம்புகள் முட்டுவதாகக் கவிழ்ந்தன எனவும் அது கண்டு பலர் கலங்கினர் என்றும் முன்னர் வரி கொண்ட பாடல்கள் ஏறுதழுதல் பற்றிய காட்சியினை நினைப்படுத்துகின்றன. 'ஏறுதழுதல்' என்ற சொல்லாடல் தற்காலத்தில் நாம் பயன்படுத்துவதில் குறைந்து வருகிறது. மாறாக ஜல்லிக்கட்டு காளை அடக்குதல் என்ற சொற்களையே அதிகம் பயன்படுத்துகிறோம். இருப்பினும் ஆடவர்களின் இவ்வீர விளையாட்டு தொன்று தொட்டு மரபு வழியாக இன்று வரையும் அலங்காநல்லூர்,பாலமேடு,அவனியாபுரம்,பேரையூர் போன்ற இடங்களில் கொண்டாடி வருவதனை நாம் காண்கிறோம்.*

***2. புனல் விளையாட்டு***

*புனல் விளையாட்டு என்பதனை நீர் விளையாட்டு என்று கூறுவர். இவ்விளையாட்டு சங்க காலத்தில் ஒரு விழாவாகக் கொண்டாடியதை சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்துக்கின்றன. அவை,*

*"கரையவர் மருளத் திரையகம் பிதிர*

*நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து*

*குறித்து மணற்கொண்ட கல்லா இளமை " (புறம்.243:-10).*

*என்ற இப்பாடல் நெய்தல் திணையில் பூக்களெல்லாம் சூடிக்கொண்டு மகளிரெல்லாம் ஆற்றில் குளித்துக் கொண்டு உள்ளனர், அப்போது கல்லா (படிக்காத) இளைஞன் பெண்கள் மீது மையல் கொண்டு ஆற்றில் அல்லது நீர்நிலையில் சறக்கென்று குதித்து ஆழத்தில் மணல் அள்ளிக்கொண்டு வந்து அந்தப் பெண்ணிடம் கொடுகிறான். அப்போது, அவனுடைய காதல் எந்த விதமான குள்ளம் கபடமும் இல்லாத வெளிப்படையான காதலான பார்க்க நான் இறங்குகிறேன் இறஞ்சிகிறேன் என்று புலவர் கூறுவதாக இப்பாடல் அமைகிறது. படித்த இளைஞன் என்றால் யோசனையற்று குதித்து நீச்சல் அடித்து மணல் அள்ளிக்கொடுத்திருக்க மாட்டான். படிக்காத இளைஞராக இருப்பதால் பித்து நிலைக் காதல் கொண்டவனாக இருக்கிறான் என்று இப்பாடல் மூலமும் விளங்கிக் கொள்ள முடிகிறது. இங்கே நமக்குத் தேவையானது ஆண்,பெண் இணைந்து விளையாடும் நீர் நீச்சல் தான். நீச்சல் அடிக்கும் போது உடல் பருமனை விரட்டுகின்றன மற்றும் நுரையீரலுக்கு செல்லும் ஆக்சிஜனின் அளவை அதிகப்படுத்துகிறது.*

*தேவை இருக்கும் இடத்தில் அது சார்ந்த உற்பத்தியும் அதிகரிக்கும். நீச்சல் அடிப்பதால் உடல் ஆரோக்கியமும் தருகிறது.*

***3. சிலம்பம்***

*சிலம்பு விளையாட்டு தமிழகத்தில் நாட்டுபுற கலைகளில் சிறந்த தனிச்சிறப்பு கொண்டதாகும். பல ஆண்டுகளுக்கு முன்பே பண்டைய மனிதர்கள் தங்களைக் காட்டு விலங்குகளிருந்து காப்பாற்றிக் கொள்ள கம்பை ஆயுதமாகப் பயன்படுத்தினார்கள் அந்த கம்பை கையாண்ட முறையே பின்னர் சிலம்பு விளையாட்டாக மாறியது மாட்சியே. நம் சிலம்பு வீர விளையாட்டு தற்பொழுது தற்காப்பு கலையாக வளர்ச்சி பெற்றதை அறிவோம்.. பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம், கோவில் விழா, ஊர்வலங்களில் இந்தச் சிலம்பு விளையாட்டு இடம்பெறுகின்றது. அவ்வாறான விளையாட்டு மரபு வழியாக பாதுக்காக்கப்பட்டு வருகிறது.*

*மற்றும் உடல் திறன் அறிவு திறன் போன்ற சிறுவர் சிறுமியர் விளையாட்டுவதை அடிப்படையாகக் கொண்டவையே சிலம்பாகும்.*



*இச்சிலம்பாட்டம் பல உட்பிரிவுகள் கொண்டவை அவை மெய்ப்பாடம், உடற்கட்டுப்பாடம், மூச்சுப்பாடம், குத்துவரிசை, தட்டுவரிசை போன்றவை எடுத்துரையாகக் கூறலாம்.*

***4. சடுகுடு***

*சடுகுடு என்றால் இன்றும் சிலர் என்ன விளையாட்டு என்பர் அவையே சடுகுடு, பலிஞ்சடுகுடு, கபடி, தெலுங்கு மொழிக் கொண்ட பலிஞ்சப்பளம் மற்றும் வங்க மொழிக் கொண்ட குடுகுடு என இவ்விளையாட்டைக் கூறுவர். ஆடவர் மற்றும் மகளிர் விரும்பி விளையாடக்கூடிய விளையாட்டாகும்.*

*பழந்தமிழர்களிடையே நிரைகளைக் கவர்த்தும் (வெட்சி),கவர்ந்த நிரைகளை மீட்டெழுப்பதுமாகிய செயல்கள் இருந்தன இதன் அடிப்படையில் போரும் எழுந்தது.போரில் வெற்றி கிட்டக் காளியை வணங்கினர். போரின் செயல்பாடுகள் விளையாட்டிலும் இருப்பதால் பலிசடுகுடு என்று மாறிவந்திருக்கக் கூடும் என்கிறார் நவராஜ் செல்லையா. இவ்வாறான சடுகுடு விளையாட்டு இன்றும் தொன்று தொட்டு போட்டி பந்தயம்*



கட்டி விளையாடி வருவதனைத் தமிழகத்தில் காணலாம். இந்த விளையாட்டு உடல் பயிற்ச்சிக்கும் ஆரோக்கியத்திற்கும் பேணிக்காக்கப் பயன்படுவது சிறப்பே..

***5. கட்ட விளையாட்டு***

*கட்டங்கள் வரையப்பட்டுக் காய்களை நகர்த்தி விளையாடப்படும் விளையாட்டு "கட்ட விளையாட்டுகள்" என்று அழைக்கப்படுகின்றன.*

இவ்விளையாட்டு குறிப்பாக சிறியவரும் பெரியவரும் கலந்துகொண்டு ஊர் பொதுச்சாவடியிலும் மற்றும் தோப்பிலும் விளையாடக் கூடிய இடமாக பெரும்பாலும் அமைகின்றது.

*கட்ட விளையாட்டு அரங்கு ஒன்று வரையப்பட்டு மூன்று முனைகள் உள்ள அரங்கிற்க்கு முன்று காய்கள் (கற்கள் போன்றவை)அல்லது சிறு துரும்பு பயன்படுத்தப்படும். இருவரும் வெவ்வேறு அடையாளமுள்ள காய்களைப் பயன்படுத்துவர். மாறி மாறி அவர்கள் காயை இறக்குவர் முழுவதும் இறங்கிய பின்னர் நகர்த்துவர். அடுத்தவர் காய்கள் நேர்க்கோட்டில் அமையாவண்ணம் தடுப்பர். ஆடுபுலி ஆட்டத்தில் புலிக்காய்கள் வெட்டப்படுவதில்லை. இப்படியாக உடல் மூலைக்கு வேலைப் பயிற்சி கொடுக்கும் சிந்தனை விளையாட்டாக அமைகின்றது.*

***6. பல்லாங்குழி***

*பல்லாங்குழி ஆட்டம் பொதுவாக மகளிரால் ஆடப்படுகிறது. முதற் பூப்படைந்த பெண் தீட்டுக்குரிய காலத்திலும் கருவுற்ற பெண் பொழுது போக்கை கழிக்க மட்டுமே விளையாடப்படும் விளையாட்டாகும். பொதுவாக தமிழ்ச் சமூக பண்பாட்டு மரபில் பெண்ணுக்குரிய சீர்வரிசைப் பொருள்களில் பல்லாங்குழியும் இடம் பெறுவதை இன்று வரையும் காண்கிறோம். பல்லாங்குழியென்பது பண்ணாங்குழி, பன்னாங்குழி, பள்ளாங்குழி, பதினாங்குழி, பரலாடும்குழி, பாண்டி என பல்வேறு பெயர்களால் வழங்கப்படுகின்றன.*

*கிராமபுறங்களில் நெல்குத்துவதற்கு தோண்டப்படுகின்ற சிறு பள்ளத்திற்க்குப் பண்ணையென்றும் பொருள் கொள்வதுண்டு.*



*பெண்கள் நெற்குத்தும் பண்ணைபோல் வட்டமான பள்ளம்*

அல்லது குழி தோண்டி, அதில் கற்களையிட்டு ஆடும் ஆட்டம் பண்ணாங்குழி எனப்படும்.

தேவநேயப் பாவாணர் பல்லாங்குழி ஆட்டத்தினை நான்கினை வகைப்படுத்தி குறிப்பிட்டு "தமிழ்நாட்டு விளையாட்டுகள் என்ற அவர் நூலிலே முதன்முதலாகப் பதித்துள்ளார். இதற்கு பின்னர் பேராசிரியர் தாயம்மாள் அறவாணன் அவர்கள் "பல்லாங்குழி(திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு)" என்ற விரிவான நூலை எழுதியுள்ளார். மற்றும் பல்லாங்குழி விளையாட்டைப் பற்றி தொ.பரமசிவன் பண்பாட்டு அசைவுகள் நூலில் அதன் வரலாற்று செய்தியினையும் கூறியுள்ளார். ஏனைய பிற நூலாசிரியர்களும் பதிவிட்டுள்ளார்கள்.

பல்லாங்குழியாட்டம் விளையாடுவதால் ஏற்படும் ஆரோக்கியத்தைப் பற்றி பதிவு செய்ய விரும்புகிறேன். பல்லாங்குழி விளையாடுவதால் எண்ணிக்கை திறன் அதிகரித்து மற்றும் குழிகளில் கற்களை எடுத்து விளையாடும் போது விரல்களுக்கு பயிற்சிக் கிடைக்கிறது. இதனால் இரத்த ஓட்டம் அதிகரிக்கின்றன. மேலும் நுண்ணிய கணிதத்திறன்களும் அதிகரிக்கிறது இவையால் அறிவுத்திறனும், வாய்ப்புநிலை இயல்பும் இவ்விளையாட்டு மூலம் உடல் நலத்திற்க்கு நன்மை கிடைக்கிறன.

### *7. கண்ணாமூச்சி*

கண்ணாமூச்சி என்ற விளையாட்டு சொல் நமக்கு நினைவுக்கு வரும்போதே "கண்ணாமூச்சி ரே ரே கண்டுப்பிடி யாரே?" என்று நினைவுக் கொள்வோம். சிறுவர் சிறுமியர் இணைந்து கண்ணை மூடிக்கொண்டு விளையாடும் விளையாட்டிற்கு கண்ணாமூச்சி என்று பெயர் கொண்டு ஓடி ஒளிந்திருப்பவர்களைக் கண்டுபிடித்து விளையாடும் விளையாட்டாகவும் அமைகின்றது. முதியோர், மூதாட்டிகள் இவ்விளையாட்டைப் பற்றி நினைவுக் கொள்ளும் போது தனது சிறுவயது காலத்திற்கு இழுத்துச் சென்று எல்லோராலும் விளையாண்டு வந்ததும் தமிழர்களின் பண்பாட்டில் ஒன்றாக பிண்ணிபினைந்த விளையாட்டாக இருந்து வருகிறது.



கண்ணாமூச்சி விளையாட்டு நம் குழந்தைகள் விளையாடும் போது அவர்களிடையே ஒற்றுமை உணர்வு

ஏற்ப்பட முக்கிய காரணமாக அமைகிறது. கண்களை மூடி விளையாடும் போது தேடிக் கண்டறியும் திறன் மேம்படும் மற்றும் செவிப்புலன் கூர்மையாகிறது. காட்டிக் கொடுக்க கூடாது என்னும் நல்ல பண்பு மனதில் வளர்கின்றது. தளர்நடைப் பருவத்தில் குழந்தைகளைத் தாய்மார் கண்ணாமூச்சி விளையாடச் செய்து நடக்க கூறி பழக்குவர் இதனால் நல்ல உடற்பயிற்சியும் மனத்தெளிவும் இவ்விளையாட்டு மூலம் பெறுகின்றது.

***8. கூட்டாஞ்சோறு***

தமிழர்களால் காலங்காலமாக விளையாடப்பட்டு வந்த விளையாட்டுகளே தமிழர்களின் பாரம்பரிய விளையாட்டு என்பர் அதனை போன்ற இந்த கூட்டாஞ்சோறு விளையாட்டும் அமைகின்றது.

கிராமப்புறங்களில் வாழும் சிறுவர் சிறுமியர் அவரவர் வீட்டிலிருந்து பொருட்களை எடுத்துக்கொண்டு ஒரு இடத்தில் ஒன்றாகக் கூடி அமர்ந்து சமைத்து உணவை அருந்தி விளையாடப்படும் விளையாட்டு கூட்டாஞ்சோறு விளையாட்டாகும்.

தமிழர் மரபில் உணவோடு உணர்வையும் குழைத்துச் செய்த சமையல் விருந்தாகிறது அதைபோல் சிறுவயதிலே உணவை சமைக்கும் பயிற்சி விளையாட்டாக அமைகின்றது. சங்க இலக்கியங்களில் விருந்தைப் பற்றி குறிப்புகள் இடம்பெறுகிறது அவையும் தொல்காப்பியர் "விருந்தே புதுமை" என்கிறார் இதையெல்லாம் தொடர்புபடுத்தி பார்க்கும் போது தொல்காப்பியர் காலத்திலேயே இவ்விளையாட்டு தோற்றம் பெற்றுயிருக்கலாம் என்று எடுத்துக்கொள்ள முடிகிறது. இந்த விளையாட்டு ஒன்றுகூடி ஒரு இடத்தில் விளையாடுவதால் ஒரு புதுமுக நட்பும் மனதில் ஒற்றுமையும் ஏற்படும். எனவே மேற்கண்டவாறு விளையாட்டு பெயர்கள் குறிப்பிட்டவைகள் மட்டுமே அல்ல இன்னும் ஏராளமான விளையாட்டுகள் நிறைந்தவையே புகழ் ஓங்கிய தமிழ்ச் சமூகமாகும்.

***நவீன கால விளையாட்டின் விளைவுகள்***

நவீன கால விளையாட்டுகள் அறிமுகமானதற்கு முன்னர் விடுமுறை நாட்கள் போன்ற நேரத்தில் ஆண்கள், பெண்கள் பல்லாங்குழி, தாயம், தொண்டி, கண்ணாமூச்சி, சிறுவர்கள் பம்பரம், கோலி, கபடி, கூட்டாஞ்சோறு, கட்ட விளையாட்டு போன்ற பல விளையாட்டுகளை விளையாடி மகிழ்ந்தனர் ஆனால் நவீன கால சூழல்கள் ஏற்பட்டதால் இன்று ஸ்மார்ட் போனில் உலகம் மாறியது. இவையால் தெருக்களில் சிறுவர்கள் விளையாடிய காலங்கள் கடந்து தெருக்களும் வெறிச்சோடி விட்டது. இதனால் நவீன கால விளையாட்டின் மூலம் ஏற்கப்படும் விளைவுகள் கீழ்காணும்படி தெளிவாகக் காணலாம்.

*இயற்கையான நேரடி கள ஆட்டங்கள் மூலம் விளையான்ட காலம் கடந்து தற்போது நவீன கால கைபேசி இணையதளங்கள் மூலம் விளையாடும் தொழில்நுட்ப வளர்ச்சி கலமாக மாறிவிட்டன.*

*சிறியவர் முதல் பெரியவர் வரை குறிப்பாக பள்ளி, கல்லூரி மாணவர்கள் இணையதளம் மூலம் விளையாடப்படும் விளையாட்டு மனித உடல் ஆரோக்கியத்திற்கு பாதிப்பை ஏற்படுத்தும் வகையில் பப்ஜி, ரம்மி, பிரீஃபயர், ப்ளூவேல், போன்ற இணையதள விளையாட்டுகள் இனிமையில் வாழ்ந்த ஒரு மனிதரை தனிமையில் முடங்கிக்கொள்ள விளைவுகள் ஏற்படுத்தி அமைகின்றது.*




*பப்ஜி விளையாட்டு 20 முதல் 24 வயது உப்பட்ட மாணவர்களில் சுமார் 58 % பேர் பப்ஜி விளையாட்டை தங்களது ஸ்மார்ட் போனில் பதிவிறக்கம் 52% செய்துள்ளதாக ஆய்வு கூறுகிறது. ஒரு நாளைக்கு 5 மணி நேரத்திற்குக்கு மேலாக அதை விளையாடி வருவதாகவும் 18% பேர் குறைந்த பட்சம் ஒரு நாளைக்கு 2 மணி நேரத்தை அதில் செலவழிப்பதாகவும் கூறப்படுகிறது. 31% பேர் தாங்கள் பப்ஜி விளையாட்டுக்கு அடிமையாக்கிவிட்டதாக உணர்வதாகவும் 20% பேர் இந்த விளையாட்டை இல்லாமல் ஒரு வார காலம் கூடத் தங்களால் இருக்க முடியாது என்று கூறும் வகையில் இணைய தள விளையாட்டு மக்கள் வாழ்க்கையில் விளைவுகள் ஏற்படுத்துகிறது.*

*பப்ஜி பயன்படுத்தும் பலர் இரவில் தூக்கமின்மை (61%) பகலில் தூக்கக் கிறக்கம் (34%) தலைவலி எரிச்சல் (36%) கண் கோளாறுகள் (39%) வகுப்பைப் புறக்கணித்தல் (27%) போன்ற பிரச்சினைகளில் அவதிப்படுவதாகவும் 7% பேர் தற்கொலை எண்ணங்களுடன் 14% பேர் பிறரைத் தாக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் இருப்பதாகவும் கூறுகின்றன ஆய்வுகள். மனநல மருத்துவர் ஆ.காட்சன் அவர்கள். இவ்வாறான விளையாட்டு மக்களுக்கு உடல் ஆரோக்கியத்திற்கு விளைவுகள் ஏற்படுத்தும் வகையில் இணையதள விளையாட்டுகள் அமைகின்றது.*

**முடிவுரை**

இன்றைய காலத்தில் குழந்தைக்கு உணவு கொடுக்க வேண்டும் என்றால் குழந்தையின் கையில் கைப்பேசியைக் கொடுத்து விளையாட விடுகின்றனர். இதனால் இப்பழக்கம் குழந்தைகள் வளர்ந்த பிறகும் கைப்பேசி விளையாட்டில் ஆர்வத்தை வளர்த்துவிடுகிறது. இதனால் பண்டைத் தமிழ்ச் சமூகம் தொன்று தொட்டு விளையாடி வந்த கண்ணாமூச்சி, கட்ட விளையாட்டு, கூட்டாஞ்சோறு விளையாட்டு, கபடி போன்ற விளையாட்டுகள் தற்போதுள்ள காலத்தில் குறைந்துக் கொண்டே வருகின்றன.

பண்டைத் தமிழ்ச் சமூக பாரம்பரிய நாட்டுபுறவிளையாட்டுகளும் அதன் நினைவுகளும் மறைந்துக்கொண்டே வருகின்றன. எனவே இதனை நினைவு படுத்துவதாயும் அமைப்புக்கான விழிப்புணர்வாயும் இக்கட்டுரை அமைகின்றது.

**துணை நின்ற நூல்கள்**


*1) முனைவர் அ.பிச்சை, தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு,உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்(2003).*

*2) தமிழரவு இதழ்.(16.01.1981).*

*3) தொகுப்பாசிரியர் முனைவர் க.பசும்பொன்,சங்கத் தமிழர் வாழ்வியல், உலக தமிழ்ச் சங்கம் மதுரை.(2014).*

*4) மாலை மலர், நீச்சல் தரும் ஆரோக்கிய நன்மைகள், update:23-01-2021.02:21 GMT.*

*5) இரா.பாலசுப்பிரமணியன்,தமிழர் நாட்டு விளையாட்டுகள்,உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்(2003).*

*6) ப.மகேஷ்வரி,புதிய நோக்கில் நாட்டுபுறவியல்.(2009)*

*7) தொ.பரமசிவன், பண்பாட்டு அசைவுகள், Phythm Veliyedu,(2022).*

*8) முனைவர் அ.கந்தசாமி,பழந்தமிழரின் பழக்கவழக்கங்கள்,உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். (2013).*

*9) மனநல மருத்துவர். ஆ.காட்சன், பப்ஜி:வினையாகும் விளையாட்டு!,இந்து தமிழ் திசை(Modified: 25 Jul, 19 07:34 am).*

# தமிழ்-வடமொழி



**பேரா.கு.இராமகிருட்டினன்**,

*முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்,*
*தென்னிந்திய மொழிகள் துறைத் தலைவர்,*
*பஞ்சாபு பல்கலைக்கழகம், சண்டிகர்-160014.*

*நாம் வடமொழி இலக்கணத்துக்கு மிகுந்த இடம் கொடுத்துவிட்டிருக்கிறோம் என்றெண்ணுகிறேன். ஆங்கிலத்தையும், பிற மொழிகளையும் தமிழில் பயன்படுத்தினாலும் தமிழ் இலக்கணத்தை ஒட்டியே நாம் எழுதுகிறோம். ஆனால் வடமொழி இலக்கணத்தை ஒட்டிச் சொற்றொடர்கள் அமைக்கிறோம். நன்னூலார் வடமொழிச் சொற்களைத் தமிழில் எப்படி எழுதவேண்டும் என்று விரிவான இலக்கணமே எழுதியுள்ளார். தமிழல்லாத பிறமொழிகளைத் தமிழில் எழுதினால் தமிழ் முறைப்படி எழுதவேண்டும் என்று தொல்காப்பியர் தெளிவுபடுத்தியுள்ளார்.*

*வடமொழியறிவும் பற்றுமுள்ளோர் வடமொழி இலக்கணத்தைப் பின்பற்றித் தமிழில் வடமொழிச்சொற்களை எழுதவேண்டும் என்றனர். நன்னூலாரும், அவருக்குப் பின்னால் வந்தவரும் தனி இலக்கணம் கூறுகின்றனர். இதனால் வடமொழியையும் பயிலவேண்டும் என்று மறைமுகமாகக் கூறினர். இப்பொழுது பலமொழிகளைக் கற்கிறோம். அவ்விலக்கணப்படியா தமிழில் எழுதுகிறோம்? இல்லையே. பின் வடமொழி இலக்கணத்தை மட்டும் ஏன் நாம் பின்பற்றி எழுதவேண்டும்?*

*சில மொழிகளில் எல்லா அஃறிணைப் பொருள்களுக்கும் பால் வேறுபாடுண்டு; அஃறிணையே இல்லை. நாமும் அவ்வாறு பால் வேறுபாடு காட்டுகிறோமா? அஃறிணையைத் தவிர்க்கிறோமா? மலையாளத்தில் இருதிணை ஐம்பால் ஈரெண்ணுக்கும் ஒரே வினைமுடிபு இருப்பதால் நாமும் அவ்வாறு எழுதுகிறோமா? இல்லையே, ஏன் வடமொழிக்கு மட்டும் இச் சிறப்பு?*

*முன்பு சிலர் கூறியவாறு எழுதுகிறோம். தேவையா? மாற்றலாமே. முன்னோர் மொழிப்பொருளை அவ்வாறே பின்பற்ற வேண்டுமானால், தொல்காப்பியர் கூறியபடி பின்பற்றலாமே. இடைக்காலத்தில் எழுந்த மாற்றத்தைத் தவிர்க்கலாமே.*

*''மூலபாடம், மூலப்பாடம் இவற்றில் எது சரி? மூலப்பாடம் என்பதே சரி என்பது என் எண்ணம். ஐயம் தீர்க்க வேண்டுகிறேன்.*

*நன்றியுடன்,*

*கோவிந்தசாமி இராசகோபால்''*

*இந்த ஐயம் ஏற்பட்டதால் அகரமுதலிகளை ஆய்ந்தேன்..*

Sanskrit Letters வட மொழி எழுத்துக்கள் vada mozhli ezhluththukkaLL

| ஜ | ஸ | ஷ | ஹ | க்ஷ | ஸ்ரீ |
|---|---|---|---|---|---|
| Ja | Sa | Sha | Ha | Ksha | Shri |

***மூலபாடம்:***

*மூலம் என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் உள. சில: அடிப்படை, முதல், கரணியம், வாயில், வழி, அடிப்படை ஆவணம்*

*மவ்வீறொற்றழிந்து உயிரீறொப்பவும்.( நன்.219) எனும் நூற்பாப்படி மூலம் எனுஞ்சொல் மவ்வீறு கெட்டு அகர உயிரீறாகி உயிர்முன்*

*உடம்படு மெய் பெறும். இன்றேல், புணர்ச்சி விதிப்படி வல்லொற்றுப் பெற்றும் பெறாமலும் ..*

*அகரமுதலிகளில் ஆய்ந்தபொழுது பல சொற்றொடர்கள்*

*மூலவிருள், மூலவுதிரம், மூலவெழுத்து, மூலவுப்பு, மூலவர், மூலவோலை என மகரம் கெட்டு அகரவுயிர் ஈறாகி மூலம், உயிர்முன் வகரஉடம்படுமெய் பெறுகின்றது.*

*'' மூலப்பகுதி, மூலப் பொருள், மூலப்படை, மூலப்படி, மூலப்பாண்டு, மூலப்பட்டை, மூலத்தீ, மூலத்துளை, மூலச்சோதி, மூலச்சிவப்பி, மூலத்தானம், மூலத்தம்பம், மூலச்சூடு, மூலச்சுன்னம், மூலக்கூறு, மூலக்கொடி, மூலக்கல், மூலக்கல்வி, மூலக்காற்று, மூலக்கடுப்பு..'' என்று வல்லொற்று மிக்குக் குறிக்கப்பெற்றுள்ளன.*

*இன்னும் பல சொற்றொடர்கள் ''மூலபாடம், மூலபரணி, மூலபலம், மூலபத்திரம், மூலதனம், மூலதாது, மூலசத்தி, மூலகாரணம், மூலகந்தம்'' என்று சொற்றொடர்கள் வல்லொற்று மிகாமல் காணப்படுகின்றன.*

மூலநோய், மூலநாள், மூலமட்டம், மூலமந்திரம், மூலமொழி, மூலவாய். மூலவேர், மூலவள்ளி, மூலவாசல், மூலவாய்க்கால், மூலமுளை என இடை, மெல்லின மெய்கள் முன் மகரம் கெட்டு இயல்பாக மூலம் புணர்ந்துள்ளது.

மூலாதாரம், மூலாகமம், மூலாசனம், மூலாசாரம், மூலாக்கினி, மூலாதிரசம் என்று மூலம், வடமொழி இலக்கணத்தைப் பின்பற்றிப் புணர்ந்துள்ளது. மேற்காட்டிய எடுத்துக்காட்டுகளை நோக்கும்பொழுது மூலம் மவ்வீறு அழிந்து எல்லா வல்லெழுத்துமுன் வல்லொற்று மிக்கு முடியவில்லை என்றறிகிறோம்.

தமிழ் அகரமுதலிகள் எல்லாம் ''மூலபாடம்'' என்றே இலக்கியச் சான்றுகள் காட்டுகின்றன வடமொழியறிந்தால்தான் இவ்வாறு எழுத முடியும். 'மவ்வீறொற்றழிந்து உயிரீறொப்பவும்' என்ற தமிழிலக்கணம் பொருந்தாதாகிவிடுகிறது. நம் இலக்கணத்தை விட்டு வடமொழி இலக்கணம் பின்பற்றப்படுகின்றது. இது தேவையா?

மேற்கூறியவற்றை, மூலப்பாடம், மூலப்பரணி, மூலப்பலம், மூலவாதாரம், மூலவாகமம், மூலவாசனம் எனத் தமிழிலக்கணப்படி எழுதலாமே.

'வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ' எழுதித் தமிழிலக்கணப்படி எழுதலாமே.




தமிழில் வடசொல் வடமொழி இலக்கணத்தைப் பின் பற்றும் என்பது பொருந்தாது. மேலும் வடமொழி இலக்கணமே சிறந்தது என்பதை ஏற்க முடியாது. வடசொல் மட்டுமன்றிப் பிறமொழிச் சொற்களும் தமிழ் இலக்கணத்தையே பின்பற்ற வேண்டும் என்பதையே தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்கள் சுட்டுகின்றன பிற மொழிச் சொற்களை எழுதும்பொழுது தமிழிலக்கணம் பின்பற்றப்படும்பொழுது இவ்வடமொழிச் சொற்களுக்கு மட்டும் தமிழிலக்கணத்தைக் கைவிடுவதேன்?

எண்ணுங்கள் புலவர் பெருமக்களே! உங்கள் கருத்துகளைத் தவறாது காரணத்தோடு எழுதினால் பலருக்கும் பயன்படும். எல்லாரும், குறிப்பாகப் புலவர் பெருமக்கள் எல்லாரும், தம் கருத்தை எழுத வேண்டுகிறேன்.

*தொடர் – 6*

# *எளிய முறையில் யாப்பறிவோம்!*

***நெருப்பலையார் இராம. இளங்கோவன்,***
*பொருளாளர்,*
*பெங்களூரு தமிழ்ச் சங்கம்*



*தொடர்ச்சி. . . .*

*பாடம்- 6. அடிகள்:*

*இதுவரை பாவலர்களே! நாம் எழுத்து, அசை, சீர், தளை ஆகியவற்றை அறிந்தோம். இனி இந்த ஆறாம் பாடத்தில் அடியென்றால் என்ன? அடியை எப்படி அமைக்க வேண்டும் என்று பார்ப்போமே! என்ன பாவலர்களே! ஆறாம் பாடத்தில் நுழைவோமா? என்னைப் பின் பற்றி யாப்பறியுங்கள்.*

***அடி:***

*அடியென்பது பல சீர்களால் அமைந்து, பாட்டுக்கு (கவிதைக்கு) உறுப்பாக அமைந்து, தளையை அடுத்து நடப்பதே அடி யாகும்.*

*ஏற்கெனவே சுட்டிக் காட்டியது போல மரபுப் பாக்களுக்கு (கவிதைகளுக்கு) அடி கணக்காகும். புதுப் பாவில் (கவிதையில்) தான் வரி கணக்கு வரும். ஆகவே, அடி என்பது வேறு; வரி என்பது வேறு.ஓரடியை இரண்டு வரிகளாகவும், பல வரிகளாகவும் எழுதலாம். சீர்கள் எவ்வளவு அதிகமாகக் கூடுகிறதோ அந்தளவு வரிகளும் அதிகமாகவே கூடும். ஆனால், எத்தனை வரிகள் கூடினாலும் அடி என்பது எத்தனை சீர்களைக் கணக்கிட்டு எழுதுகிறோமோ அந்த இறுதிச் சீர் வரை ஒரு அடியாகத்தான் கணக்கில் கொள்ள வேண்டும். எடுத்துக் காட்டாக என் தமிழ்த்தாய்ப் பாட்டின் ஒரு அடியை மட்டும் காண்போம்.*

*விருத்தம் என்ற மண்டிலத்தில் ஆறு சீர்கள் முதல் எத்தனை சீர்கள் வேண்டுமானாலும் வைத்துக் கூட பாடலாம். அது அவரவர்களின் தனித் திறனை, பாவின் (கவிதை) ஆற்றலைப் பொறுத்ததாகும். ஆக, எத்தனை சீர்கள் வைத்துப் பாடினாலும் ஓர் அடியாகத்தான் கணக்கில் கொள்ள வேண்டும்.*

*அறு சீர்,*
*எண்சீர்,*
*பதின் சீர்,*
*பன்னிரு சீர்,*
*பதினான்கு சீர்,*

*பதினாறு சீர்,*
*பதினெட்டு சீர்*

*என்று இரண்டு இரண்டு சீராக ஏற்றிப் பாட வேண்டும். பதினைந்து சீரில் பாடக் கூடாது. யாரும் பாடியதுமில்லை. இருப்பினும் நான் பதினைந்து சீரில் பாடியுள்ளேன். இனி பாட்டின் ஒரு அடியை மட்டும் எடுத்துக் காட்டாக அறிவோம். இதோ அந்தப் பாட்டின் அடி.......*

> *வான்தட்டில் சிதறுண்ட தாரகையாம் வெள்ளிக் காசாய்,*
>
> *வானவீதி தனிலொளிரும் வெண்ணிலவின் வெள்ளித் தட்டாய்,*
>
> *விடிகாலை தோன்றுகின்ற விடிவெள்ளி வெள்ளிப் பூவாய்,*

*( நெருப்பலையார்)*

*என்று வந்திருப்பது ஒரு அடியாகும்; முதல் வரிக்குப் பின் இரண்டாம் வரியும் மூன்றாம் வரியும் உள்ளே தள்ளி வந்திருப்பதை நோக்குங்கள். ஒரு அடியில் வரும் அத்தனை சீர்களும் முடியும்வரை வரிக்கு வரி உள்ளே தள்ளி எழுத வேண்டும் என்று ஒரு கணக்கு வைத்து எத்தனை வரியானாலும் ஒரு அடிக்கானது என்பதை ஆய்ந்து உணர்க. இப்படி வரி தோறும் எழுதுவதற்குக் கரணியமுண்டு. அது என்னவெனில் தாளிலோ நூலிலோ அத்தனை சீர்களையும் ஒரே வரியில் அடக்க முடியாது. ஆக, அந்த அடிக்கானது என்பதை உணர்த்தவே உள்ளே தள்ளித் தள்ளி அந்த அடி முடியும் வரை எழுத வேண்டும் என்பது பாட்டு என்ற கவிதையின் கணக்காகும்.*




*பாட்டு என்பது வேறு; சூத்திரம் என்ற நூற்பா வேறு. சூத்திரம் என்ற நூற்பா ஓர் அடியிலும் வரும்; பல அடிகளிலும் வரும். ஆனால், செய்யுள் ஓரடியில் வாராது. இதற்கு,*

> *'முதல்வழி சார்பென நூல் மூன்றாகும்'*

*என்று நன்னூல் பகர்கிறது. ஆத்தி சூடியும் கொன்றை வேய்ந்தானும் என்ற சூத்திரம் எனும் நூற்பா சிறு சிறு சொற்றொடர்களாலும் பெரும் பெருஞ்*

சொற்றொடர்களாலும் அமைந்த தனித்தனி சொற்களாகும். ஆத்தி சூடியில்...........

ஆத்தி சூடி அமர்ந்த தேவனை

ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே!

என்பதும், கொன்றை வேய்ந்தானில்........

கொன்றை வேய்ந்த செல்வன் அடியினை

என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே!

என்பதும்.......

வெற்றி வேற்கை வீர ராமன்

கொற்கை யாளி குலசே கரன்புகல்

நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னால்

குற்றம் களைவோம் குறைவிலா தவரே!

என்பதும் பாட்டுகளாக வளர்ந்து வருவதே அடியாகும்.

சீர்களால் அமைந்ததே அடியாகும். ஓரடிக்கு இரண்டு சீர்கள் முதல் முப்பத்திரண்டு சீர்களாகவும், நூறு சீர்கள், ஆயிரம் சீர்கள் வரையிலும் நீண்டு வரும். இதில் நான்கு சீர் வருவதை அளவடி என்பர். நான்கு சீருக்கு மேல் வரும் அடிகளுக்கு சீர்களுக்கு ஏற்ப என்னென்ன அடிகள் உண்டு என்பதை அறிவோமா? சீர்களின் எண்ணிக்கையை வைத்தே அடிகளுக்குப் பெயரிடப் பட்டுள்ளது. அந்தப் பெயர்கள் யாவை என்பதை நாம் கீழே காண்போம்!

**அடிகளின் பெயர்கள்:**

1) குறளடி

2) சிந்தடி

3)அளவடி

4)நெடிலடி

5) கழிநெடிலடி

ஆகியவை.

குறளடிக்கு இரண்டே சீர்கள் இருக்கும்;

சிந்தடிக்கு மூன்று சீர்களே கொண்டிருக்கும்;

அளவடிக்கு நான்கு சீர்களே கொண்டிருக்கும்;

நெடிலடிக்கு ஐந்து சீர்கள் கொண்டிருக்கும்;

கழிநெடிலடி பாடல் ஆறு சீர் முதல் அதற்கு மேற்பட்ட சீர்கள் இருக்கும்.

கழிநெடிலடிக்கு ஆறு சீர்கள் முதல் அதற்கு மேற்பட்டு வருவதாகும். கழி நெடில் அடி என்றால் நெடிய அடிகள், சீர்கள் மிகுந்து வருதலாகும். இந்தச் சொல்லை விரிவாகவே பார்ப்போம்.

கழி- என்றால் மிகுதி என்பதாகும்.

நெடிலடி என்பது ஐந்து சீர்கள் வருவதாகும்.



குறளடி என்பது வேறு ; குறள் வெண்பா என்பது வேறு. இரண்டையும் போட்டுக் குழப்பிக் கொள்ளாதீர்! மீண்டும் நினைவூட்டுவது என்னவெனில், குறளடி என்பது இரண்டு சீர்கள் மட்டுமே கொண்டிருப்பது. குறள் வெண்பா என்பது ஏழு சீர்களைக் கொண்டு இரண்டடியாக வருவது என்ற வேறுபாட்டை முதலில் உணர்க. குறளடி என்றால் இரண்டே சீரால் கொண்ட அடியாகும். குறள் வெண்பா என்பது ஏழு சீருடன் இரண்டு அடிகளால் ஆனது. இவ்வடிகளுக்கு எடுத்துக் காட்டாக பார்க்காமல் உணர்ந்து எழுத இயலாது. ஆகவே கீழே காண்க:

குறளடி- இரு சீர் கொண்ட அடி யாகும்.

பாடல்:

அற்றது பற்றெனில்

உற்றது வீடுயிர்

செற்றது மன்னுறில்,

அற்றிறை பற்றே!

இப்பாடல் இரு சீர் கொண்ட குறளடியால் அமைந்த வஞ்சித்துறை ஆகும். அடுத்து.......

***சிந்தடி:***

*மூன்று சீர்களைக் கொண்டு முடிவுறும் அடியே சிந்தடியாகும். சிந்தடி என்பது குறள் வெண்பாவை விட அடி நீண்டதாகும். இதனை சிந்தடி என்பர். மூன்று சீருடையதாகும். இதற்கு எடுத்துக் காட்டாக ஒரு பாடல் பார்ப்போம்.*

*ஈடும் எடுப்புமில் ஈசன்*

*மாடு விடாதென் மனனே!*

*பாடுமென் நாஅவன் பாடல்,*

*ஆடுமென் அங்கம் அணங்கே!*

*இது மூன்று சீர்களைக் கொண்டு சிந்தடியாலான வஞ்சி விருத்தம் என்ற (வஞ்சி மண்டிலம்) பாட்டாகும். இதில் அடிதோறும் மூன்று சீர்கள் மட்டும் வருவதை நோக்கி மனத்தில் மனனம் செய்து கொள்ளுங்கள். இனி அளவடியைப் பற்றி அறிவோம்.*

***அளவடி:***

*இது அடிதோறும் நான்கு சீர்களைப் பெற்று அளவொத்து வருவதால் அளவடி என்றும் நேரடி என்றும் பகர்வர். சீர்கள் குறைந்தோ அல்லது சீர்கள் அதிகமாகவோ இல்லாமல் நான்கு சீர்கள் மட்டுமே என்ற அளவில் அளவொத்த சீர்கள் நான்கு நான்காய் இருப்பதால் அளவடி என்கின்றனர் இலக்கண ஆசிரியர்கள். அளவடியை நேராகக் கொண்டிருப்பதால் நேரடி என்றும் அழைப்பர். நேர் என்றால் தலைமை என்று பொருளாகும். தலைமை என்றால் விருப்பு வெறுப்பு இல்லாமல் சமமாக நடப்பதாகும். அதேபோல், நான்கு சீர்களால் சமமாக அந்த அடி நடப்பதால் நேரடி என்றும், அளவடி என்றும் பெயர் வழங்கப்பட்டது. இந்த அளவடிக்கு எடுத்துக் காட்டாக ஒரு பாவினைப் பார்ப்போம்.*

*பின்னித் திகழேன் பிழையத் தனையும்*

*மன்னித் திலகும் பதவாழ் வருள்வாய்*

*நன்னித் திலமொத் தநகைத் துவர்வாய்க்*

*கன்னித் திலகந் தருநான் முளையே!*

*இது நான்கு சீர்களால் நான்கு அடிகளிலும் அளவடியாகக் கொண்ட கலி மண்டிலம் எனும் கலி விருத்தப் பாடலாகும்.*

*யாப்பிலக்கணம் வளரும்...*

# திருவாசகத்தில் அன்புக் கோட்பாடு

## *[தமிழ் இலக்கியங்கள் கூறும் வாழ்வியல் சிந்தனைகள்- 10]*



***மு. பழநிச்சாமி***
*நாகமலை, மதுரை-19*
*மின்னஞ்சல் : vmps834@gmail.com*

***முகப்பு வாசல் :***

*இந்த முகப்பு வாசல் வழி நுழைந்து- "திருவாசகத்தில் அன்புக் கோட்பாடு" எனும் கட்டுரைக் கோயிலுக்குள் செல்லலாம். 'முகப்பு வாசல் ஞான விழிமுனை திறந்த நிலையில் நாவில் இன்பரசமான ஆனந்த அருவி பாயப் பெருக்கெடுத்து வந்த மந்திர முழக்கம் இது.*

*ஈசன் வாசகரிடம் உவந்துகேட்டு எழுதி வைத்துக்கொண்டு வாசித்துப் பார்த்த வாசகம். இரு செவி குளிரக் களிகூர வரும் இந்தவாசகத்தை துணை தேடும் அன்பர்களுக்குச் செம்பதச் சிந்தனை தந்து சுகப்பட வைக்கும் சுவையமுது. பரம சுகமாகிய சுத்தப்பெரும்பதம் சித்திக்க அருளும் அருள் வாசகம் இது.*

*சவுக்யமும் சகல செல்வயோகமிக்க பெருவாழ்வும் சிவஞான முத்தியும் பரகதியும் தரவல்ல தெள்ளமுது. வாதவூரரின் ஞானமுறு செங்கனி வாயிலிருந்து வெளிவந்த இச்சொல்லமுதை நெஞ்சில் – நினைவில் ஊனில் - உயிரில் வைத்துப் பேணுவோம்'.*

***திருவாசகத்தில் அன்புக் கோட்பாடு :***

*எழிலூற இனிபூற இன்தமிழின் சுவையூறத் திகழும் தேனூறும் வாசகமே திருவாசகம். தெள்ளு தமிழ்ச் சொல்லெடுத்து உள்ளம் அள்ளும் அமுதப் பெருக்காகத் திருவாசகத்தை ஆக்கி அளித்தவர் மாணிக்கவாசகர் ஆவார். திருவாதவூரடிகளின் சிவானுபவ நிறைவில் -பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏகவுருவாய் வெளிப்பட்ட அமுதப் பெருவெள்ளத்தைத் தேக்கி வைத்துள்ள ஞானக்கருவூலம் இது. இது தோன்றி நிலவிய இந்த ஆயிரம் ஆண்டுகளில் கோடிக்கணக்கானோரின் சிந்தையைக் கொள்ளை கொண்டு ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உவப்பிலா ஆனந்தமாய் தேனினைச் சொரிந்து வாழ்வித்து வருகிறது.*

*மணி வாசகரின் நெஞ்சாழத்திலிருந்து நீந்தி வந்த திருவாசகப் பாடல்கள் 656. அத்தனையும் அன்புருவான சக்தி மிக்க பக்தி முத்துக்கள்; சுகசொரூபமான*

*சொல் வடிவங்கள்; ஞானக்கனலை நெஞ்சினுள்ளே மூட்டி எழுப்பும் நாத மந்திரங்கள்.*

*"ஐயா என் ஆருயிரே அம்பலவா" என்றும்-*

*"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே" என்றும்-*

*"சோதியே சுடரே சூழொளி விளக்கே" என்றும்-*

*"நெல்லிக்கனியைத் தேனைப் பாலை நிறையின்னமுதை அமுதின் சுவையை" என்றும்-*

*"ஞானக்கரும்பின் தெளிவைப் பாகை நாடற்கரிய நலத்தை நந்தாத் தேனைப் பழச்சுவை ஆயினானை" என்றும்-*



*அந்த மூலபரம் பொருளைப் பிச்சிப்பூச் சொற்களால் மெச்சிப் புகழ்ந்து அர்ச்சித்த அர்ச்சனை மலர்ச்சரம் தான் திருவாசகம்.*

*'செல்லுமளவும் செலுத்துமின் சிந்தையை' என்ற திருமூலரின் சிந்தனையூற்றைச் சுவைத்துப் பார்த்து ருசிகண்டு, அந்த மந்திரச் சொற்களில் கட்டுண்டு, ஆட்பட்டு, ஆழங்காற்பட்டுப்போய், அதன் அனுபவ வெளிப்பாடாக,*

*"சிந்தனை நின்தனக்கு ஆக்கி;*

*நாயினேன்தன் கண்இணை நின் திருப்பாதப் போதுக்காக்கி;*

*வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி;*

*வாக்கு உன் மணிவார்த்தைக்கு ஆக்கி; "*

*எனப்பாடி அனைத்தையும் அந்த ஆதிப் பிரானுக்கு அடிப்படுத்துகிறார்.*

*இவ்வாறு, சிந்திக்கும் சிந்தனைத் திறத்திலெல்லாம் வாழ்த்தும் வாழ்த்தொலியிலெல்லாம் பேசும் மணிவார்த்தைப் பொருளிலெல்லாம் அந்தப் பரம்பொருளையே கொண்டுவந்து காட்டிக் காட்டி, பக்தி அனுபவத்தைக் கொட்டிக் கொட்டித் திரட்டி வைத்துள்ள தேனடைதான் திருவாசகம். கல்லைப் பிசைந்து கனியாக்க வல்ல அற்புதத்தையும் உருகாத சிந்தையையும், நெகிழாத*

*நெஞ்சையும் உருகவும் நெகிழவும் வைக்கும் இரசவாத வித்தை பெற்றுத் திகழும் தனியொரு வாசகம்தான் திருவாசகம்.*

*“வாதவூர்வேந்தருக்கு, உருக, இந்த ஓர் உள்ளமும், ஊற்றெழும், கண்ணீரருவி வார இரு கண்களும் போதாவாம். உடம்பெல்லாம் கண்ணாயிருந்து, கண்ணீரருவி பாயவேண்டுமாம். உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால்வரை, நெஞ்சாக இருந்து நெகிழ வேண்டுமாம்”.*

*பக்தி அனுபவத்தின் எல்லைக் கோட்டையும் கொடுமுடியையும் எப்படிக் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறார் பாருங்கள்.*

*(உள்ளந்தாள் நின்றுச்சி யளவும் நெஞ்சாய் உருகாதால்; உடம்பெல்லாங் கண்ணாய் அண்ணா வெள்ளந்தான் பாயாதால்)*

*‘அழுது அழுதே நெஞ்சைத் தூய்மை செய்து அதன்மூலம் ஆண்டவனை அடைவதே - எளிய வழி’ என்கிறார்.*

*'அழுதால் உன்னைப் பெறலாமே' என்பது, அந்த ஆன்ம வள்ளலின், அடி நெஞ்சிலிருந்து சுரந்துவந்த அனுபவச் செறிவுமிக்க வாசகம்.*

*திருவாசகத்தின் சாரமனைத்தையும் பிழிந்து மூன்றே மூன்று சொற்களில் வடித்துச் சொல்வதாக இருந்தால் அந்த மூன்று சொற்கள் 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்பதாகத்தான் இருக்க இயலும்.*

*"யானேபொய் என்நெஞ்சும் பொய் என்அன்பும் பொய்*
*ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே*
*தேனே அமுதே கரும்பின் தெளிவே*
*தித்திக்கும் மானே*
*அருளாய் அடியேன் உனை*
*வந்துறுமாறே"*

*அன்பால் அழுவதற்கும் துன்பத்தால் அழுவதற்கும் வேறுபாடு உண்டு. பக்திப் பண்ணையில்*

*கருக்கொண்டு உருவாகும் அன்புணர்வு பரமன்பால் பரவசமுற்றுப் பெருகும் அன்புணர்வு.*

*அது, அழுகையாய் உருக்கொள்கிறது.கண்ணீரருவியினூடே கேள்விக் கணைகளைக் கட்டித் தொடுத்துக் கதறுகிறார், வாதவூரர்.*

*"அருளாது ஒழிந்தால் அடியேனை*
*அஞ்சேல் என்பார் ஆரிங்கு?"*

*"ஆரொடு நோகேன்?;*
*ஆர்க்கெடுத்துரைக்கேன்?*
*ஆண்ட நீ அருளிலையானால்''*

*அழும் அதுவேயன்றி மற்றென் செய்கேன்?, சேயனாகி நின்று அலறுவது அழகோ? "ஊற்று மணல்போல் உள்ளே உருகி ஓலமிட்டுப் போற்றுவது என்று?"- என்பன போன்ற, கனிவும் கசிவும் உருக்கமும் உள்ளடர்ந்த, செஞ்சொல் தொடர்களால் பாடி, சிந்தாத கண்ணீரைச் சிந்திச் சிந்தை கலங்குகிறார்.*

*இவ்வாறு, உருகவும் நெகிழவும் உள்கசியவும் உருகி அழவும் வேண்டுமானால், அதற்கு அடிப்படையாக அமைவது அன்பு; ஆரா அன்பு. அன்பு என்பது உள்ளம் உருகும் தனியொரு உணர்வுநிலை. நீராய்க் கசிந்து நெக்குருகி நிற்கும் உளப்பாங்கு. அந்தக் கரணத்தின் பிரியவடிவமான இனிய உணர்ச்சி. தாயின் மார்பிலிருந்து பாலும் தாய் மண்ணிலிருந்து நீரும் சுரந்து வருவதுபோல் உயிருக்குள்ளிருந்து ஊற்றெடுத்துப் பெருகும் உணர்ச்சிப் பெருக்கு. பாடத்திட்டம் வகுத்து வெளியிலிருந்து புகட்டிப் பெறுவதில்லை அன்பு நிலை. ஒவ்வொரு உயிரும் தனக்குள்ளிருந்து தானாகப் பெறும் தனியொரு அனுபவ நிலை அது. அனுபவப்பொருளாக ஆகிவரும் இந்த அன்புணர்வை உரை அளவைகளால் (அதாவது வெறும் வாய் வார்த்தைகளால்) முற்றாக எடுத்துச் சொல்லி உணர்த்திவிட இயலாது.*



*மலருள் மணம் போலவும் கரும்புக்குச் சாரமும், கனிக்குச் சுவையும் போலவும் 'அன்பு' உயிரின் குணமாய் உள்ளது. "உள்ளம் உருகில் உடனாவார்" என்பது சம்பந்தர் வாக்கு. பள்ளம் உள்ள இடத்தில் வெள்ளம் புகுதல் போல் உள்ளம் உருகிய உயிரில் இறைவன் வந்து தங்குகிறான். வந்து தங்கவேல் 'அன்பு' உயிரின் இன்ப ஊற்றாய் ஆனந்த வெள்ளமாய் ஆகிவிடுகிறது.*

*ஞானநீர் நல்கி நலம் புரிந்து போன நம் முன்னோர் 'அன்பு' எனும் இந்த உயிர்ப் பண்பையே, அதாவது அன்பொடு செறிந்த அருள் ஒழுக்கத்தையே பேணி யாவரும் உய்திபெற உணர்த்தியுள்ளனர். 'அன்பின் வழியது உயிர்நிலை' என்பது வான்புகழ் 'வள்ளுவரின்' அமுத வாக்கு.*

*“ஆர்வல்லார் காண அரனவனை அன்பென்னும்*
*போர்வை அதனாலே போர்த்தமைத்துச் - சீர்வல்ல*
*தாயத்தால் நாமும் தனிநெஞ்சின் உள்ளடைத்து*
*மாயத்தால் வைத்தோம் மறைத்து”*

*இறைவன் திருவாயால் 'அம்மையே' என அழைக்கப்பெற்ற 'காரைக்கால் அம்மையாரின்' கனிவான பேச்சு இது.*

*'அழலார் வண்ணத்து அம்மானை அன்பினில் அணைத்து வைத்தேனே' என்பது 'நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்' என அதிர்ந்து முழங்கிய 'நாவுக்கரசரின்' நல்லுரை.*

*'நாளாய போகாமே நஞ்சணியும் கண்டனுக்கு ஆளாய அன்பு செய்வோம்' இது, சைவம் தழைத்தோங்க வந்த' சம்பந்தப் பெருமானின்' சொல்லோவியம்.*

*'ஆரா அமுதே! அடியேன் உடலம் நின்பால் அன்பாயே, நீராய் அலைந்து, கரைய உருக்குகின்ற நெடுமாலே...' என்பது ஞானத்துறை படிந்து ஆடிக்களித்த 'நம்மாழ்வாரின்'நல்லுரை.*

*“அன்பு உள்ளுருகிஅழுவன்;*
*அரற்றுவன்*
*என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்*
*என் பொன்மணியை இறைவனை ஈசனைத்*
*தின்பன் கடிப்பன் திருத்துவன்தானே”*

*இது, உரிமைபடப் பேசி உருகி அழுதுள்ள மந்திரம் தந்த மூலரின் மனக் கசிவு.*

*“அன்பெனும் ஆறு கரையது புரள*
*நன்புலன் ஒன்றி நாத என்று அரற்றி*
*உரை தடுமாறி உரோமம் சிலிர்ப்பக்*
*கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்*
*கண்களி கூர நுண்துளி அரும்பச்*
*சாயா அன்பினை நாள்தொறும் தழைப்பவர்*
*தாயே ஆகி வளர்த்தனை போற்றி”*

*இது உள்ளத்தை உருக்கும் திருவாசகப் பாடல்களை உருவாக்கித் தந்த 'மணிநாவரின்' மனநெகிழ்ச்சி.*

*'என்பெலாம் உருகி உக்கிட்டு என்னுடைய நெஞ்மெனும் அனபினால் ஞான நீர்கொண்டு ஆட்டுவன்' என்பது 'திருமங்கைக்கோனின்' திருவாக்கு.*

*'அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக இன்புறு சிந்தை இடுதிரியா' என்பது கடல்மல்லைப் பெரும்பதி தந்த 'பூதத்தாழ்வாரின்' பொன்னுரை.*

*'என்பில் எள்கி நெஞ்சுருகி உள்கனிந்து எழுந்ததோர் அன்பிலன்றி ஆழியானை யாவர் காண வல்லரே' என்பது தெய்வத்தின் வசப்பட்ட 'திருமழிசைப்பிரானின்' திருவாக்கு.*

*'ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண் ஆரேனும் காணா அரன்' இது 'திருக்களிற்றுப்படியார்' - பாடல் வாசகம்.*

*'அன்பைப் பெருக்கி எனதாருயிரைக் காக்க வந்த இன்பப் பெருக்கே! இறையே பராபரமே!!' என்பது ஞானசித்தி பெற்ற 'தாயுமானவரின்' தனியுரை.*

*'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே' என்பது, தயாமூல தன்மத்தைத் தரணிக்கெல்லாம் எடுத்தோதிய 'வள்ளற்பெருமான்' வாக்கு.*

*'யோகியாகட்டும்; துறவியாகட்டும்; ரிஷியாகட்டும்; தபோதனர் ஆகட்டும்; இவர்களுள் எவரும் அன்பின்றி அருள் தொண்டர் வீட்டை அடையமுடியாது' என்பது கருணை வள்ளல் 'கபீர்தாசரின்' கனிந்தமொழி. 'அன்பு மார்க்கத்தைப் பின்பற்றியவர்களே ஆண்டவனை அடைந்தனர்' இது 'குருகோவிந்தசிங்கின்' திருவாக்கு. இவ்வாறு வாழையடி வாழையென வந்த நம் ஞானியர் அன்பையே, அறத்திற்கெல்லாம் அடிநிலை அறமாகச் சொல்லிச் செயல்பட்டுச் சென்றுள்ளனர்.*



*சாத்திரத்திற்குத் திருமந்திரம்; தோத்திரத்திற்குத் திருவாசகம் என்பது முதுமொழி. அடிமனதில் ஆண்டவனைப் பற்றிய ஆரா அன்புணர்வு மேலோங்குமானால் என்னென்ன விளைவுகள் எதிர்கொள்ளும் எனக் காட்டுகிறார் மந்திரம் தந்த மூலர். அன்பு தோன்ற அழுகை தோன்றுமாம்; அழுகை தோன்ற அரற்றல் தொடருமாம்; அரற்றல் தொடர என்புருகி இறைவனை இராப்பகல் ஏத்தும் நிலை தோன்றுமாம். அதுவர உரிமையும் உறவும் வலுப்பெற்று ஈசனை தின்பதும் கடிப்பதும் திருத்துவதுமான செயல்கள் சிறந்து வருமாம்.*

> *"அன்பு உள்ளுருகி அழுவன்; அரற்றுவன் ;*
> *என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்*
> *என் பொன்மணியை, இறைவனை, ஈசனைத்*
> *தின்பன்: கடிப்பன்; திருத்துவன்-தானே"*

*எனத் திருமூலர் பரமன்பால் பதித்த அன்பால் உருகி அழுதுள்ளார்; உரிமைபடப் பேசியுள்ளார்.*

*இந்த அன்புக் கோட்பாட்டிற்கு வலுவும் வனப்பும் சேர்ப்பது போல, பாசவதைப்பரணி என்னும் நூலுடையார், "என் பாவம் ஆறு கடல் ஏழிருந்தும் என்னம்மை அன்பாளர் கண்ணருவி ஆடுவது திருவுள்ளம்" என்று பாடுகிறார். ஏழு கடல்களில் இருந்தும் புனித ஆறுகளில் இருந்தும் நீரைக் கொண்டு வந்து திருமுழுக்காட்டினாலும் இறைவி அவற்றை விரும்பாமல் அன்பர்களின் கண்களில் இருந்து விழும் இரண்டு சொட்டுக் கண்ணீருக்காக ஏங்கி நிற்கிறாளாம்.*

*நாம் ஆலயம் செல்கிறோம். அந்தப் பரம்பொருளின் முன் நின்று கரம் குவித்துச் சிரந்தாழ்த்தி நீர் வரும் கண்ணினராய் நின்று நெகிழ்ந்து வழிபடுகிறோம். இவ்வாறு இறைவன் முன் ஏன் நீர்மல்க நிற்கிறோம்? பணம் வேண்டும்; பதவி வேண்டும்; வாணிபம் செழிக்கவேண்டும்; பிள்ளைக்குப் படிப்பு வேண்டும்; பெண்ணுக்கு வரன் வேண்டும்; வரியிலிருந்து தப்ப வேண்டும்; வழக்கிலிருந்து விடுதலை வரவேண்டும்; இவ்வாறு எண்ணற்ற வேண்டுதல்களை வேண்டிக் கசிந்துருகி நிற்கிறோம் இதில் தவறில்லை.*

*இவற்றையெல்லாம் இறைவனிடம் வேண்டாது வேறு யாரிடம்போய் வேண்டுவது? 'வேண்டுவார் வேண்டுவதே ஈவான்கண்டாய்' என்பார் நாவுக்கரசர். 'வேண்ட முழுதும் தருவோய் நீ' என்பார் மணிநாவர். 'அரிய பொருளனைத்தும் தரும் பொருளே' என்பார் தாயுமானவர்.*

*ஆனால் உலக இன்பங்களுக்கு வேண்டியதை மட்டும் கேட்டு அவற்றைப் பெறுவதற்குரிய சாதனமாக இறைவனைக் கருதி அழுது தொழுது நிற்பது மெய்யான இறையன்பாகுமா? இத்தகைய அன்பைப் 'பொய்யன்பு' என்று பேசுகிறார் அடிகள். சித்தத்தைச் சிவன்பாலே வைத்துத் தொண்டர் சீர் பரவும் சேக்கிழார் பெருமான் பிரதிபலன் பாராது இறைவனிடம் செலுத்தும் அன்பின் திறத்தைக் 'கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி வீடும் வேண்டா விரலினார்' எனப் பேசுவார்.*

*"இறைவா! எனக்குப் பொன் வேண்டாம்; பொருள் வேண்டாம்; போகமும் வேண்டாம்; உன்மேல் அன்பு செலுத்தி வாழும் பண்பை மட்டும் பரிசாகக் கொடு; அது போதும்" என்னும் பொருளில் 'யாஅம் இரப்பவை பொன்னும் பொருளும் போகமும் அல்ல; அருளும் அன்பும் அறனும் மூன்றும் உருளிணர்க் கடம்பின் ஒலிதாராயே' எனக் கடுவன் இளவெயினனார் என்னும் பெருமகனார், பிரதிபலன் பாராது இறைவனிடம் செலுத்தும் அன்பை மாட்சிமைப் படுத்தியுள்ளார்.*

*இத்தகைய பிரதிபலன் பாராத பொய்தீர்ந்த இறையன்பில் ஈடுபட்டுப் போய், திளைத்துப் போய், ஒன்றிப்போய் நிற்கும் அளவிற்கு முறுகிய ஆற்றல் மிக்க அன்பு மணிநாவரின் வாசகத்தாலேயே வாசிப்பதனால், பேரா ஒழியா, பிரிவிலா, மறவா, நினையா, அளவிலா, மாளா, மெய்யன்பு தம்மிடம் உண்டா? இல்லையா? எனத் தனக்குத்தானே மதிப்பீடு செய்து பார்க்கிறார் மணிநாவர். கிடைத்த பதில் என்ன?*

*"இல்லை நின்கழற்கு அன்பது என் கணே -ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கு அன்பு இலை யானேபொய்; என் நெஞ்சும் பொய்; என் அன்பும் பொய் நெகும் அன்பு இலை நினைக்காண , சொரிந்த கண்ணீர்ச் சொரிய, உள்நீர் உரோமம் சிலிர்ப்ப, உகந்து அன்பாய்ப் புரிந்து நிற்பது என்று கொலோ? கண்ணீர் அருவிபாயக் கையும் கூப்பி கடிமலரால் புனையப் பெறுவது என்றுகொலோ? கலந்த அன்பாகிக் கசிந்து உள்ளுருகும் நலம் தான் இலாத சிறியேன், அன்பால் மனமும் நின்பால் அழுகேன், மெய்யன்பு பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன் யான் உன் தாள் இணை அன்புக்கு ஆரா அடியேன் அயலே மயல் கொண்டு அழுகேனே, ஆமாறுன் திருவடிக்கு அகங்குழையேன் அன்புருகேன், ஆண்டவன் கழற்கு அன்பு நெகுவதாவதும் நித்தலும் அமுதொடு தேனோடு பால் கட்டி மிகுவதாவதும் இன்றெனின் மற்று இதற்கு என் செய்கேன்?, உனைக்காண்பான் அலவா நிற்கும் அன்பிலேன்" என்றெல்லாம் கூறித் தம்மிடம் ஆற்றல் மிக்க அன்பு ஆறாகப் பெருகவில்லை; ஊற்றாக ஊறவில்லை; சுனையாகச் சுரக்கவில்லை எனச் சொல்கிறார். தன்னிடமுள்ள இந்த நிலை கண்டு ஏங்கி வருந்தி முனைந்து முறையிடுகிறார் முதல்வனிடம். வாதவூரர் எவ்வாறு வரம் வேண்டி உருகுகிறார் பாருங்கள்.*

*வேண்டும் நின்கழற்கு அன்பு என்றும், நின்றன் வார்க்கழற்கு அன்பு எனக்கு நிரந்தரமாய் அருள்வாய் என்றும், ஊனே புகுந்த உனை உணர்ந்தே உருகிப் பெருகும் உள்ளத்தை கோனே அருளும் காலம் கூடுதல் வேண்டும் என்றும், இடையறா அன்புனக்கு என் ஊடகத்தே நின்றுருகத் தந்தருள் என்றும், மெய்யன்பை உடையாய் நான் பெறவேண்டும் என்றும், உடையாயொடு கலந்து உள்ளுருகிப் பெருகி நெக்குருகி, ஆடியாடி ஆனந்தம் அதுவேயாக அருளும் காலம்தான் கூட வேண்டும் என்றும், வேண்டாது ஒன்றும் வேண்டாது மிக்க அன்பே மேவுதலே என்றும், கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே என்றும், அன்பு நின்கழற்கணே புணர்ப்பதாக என்றும், வரம் வேண்டுகிறார்.*

*இந்த இவரது விண்ணப்பம், கனிவும் கசிவும் மிக்க வேண்டுகோள், இறைவன் திருசெவிகளுக்கு எட்டுகிறது. அரிய பரமனும், அன்புக்கு எளியனாய் முந்திக் கிளர்ந்து முனைந்தெழுந்து வந்து அடிகளது உள்ளத்தில், தெய்வ ஒலி ஓங்கி*

*வளரும் வண்ணம், ஓய்வும் மாய்வும் தேய்வும் சாய்வு மற்ற ஓர் அன்பை அளித்து அளவிலா ஆனந்தம் அருளுகிறான்.*

*இதை, 'ஓங்கி உளத்து ஒளிவளர' என்றும், 'பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து பாவியேனுடைய ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி' என்றும், 'கடையவனேனைக் கருணையினால் கலந்து ஆண்டு கொண்ட விடையவனே' என்றும், 'என்பு நைந்துருகி நெக்கு நெக்கு ஏங்கி, அன்பெனும் ஆறு கரையது புரள, நன்புலன் ஒன்றி, நாத என்று அரற்றி, உரைதடுமாறி உரோமம் சிலிர்ப்பக் கரமலர் மொட்டித்து இருதயம் மலர, கண்களிகூர, நுண்துளி அரும்ப, சாயா அன்பினை நாள்தொறும் தழைப்பவர் தாயேயாகி வர்த்தனை போற்றி'என்றும் பேசிக் காட்டுவார்.*



*இவ்வாறு தம் அன்பு வியூகத்துள் அந்த ஆதி முதல்வனை வசப்படுத்தி வளைத்துப் பிடித்து வைத்துக்கொண்ட அனுபவத்தால் 'பக்தி வலையில் படுவோன்' என பரமனுக்குப் புதிய பெயர் ஒன்றையும் படைத்து மகிழ்கிறார். இவ்வாறு பொய்தீர்ந்த மெய்யன்பு கைவரப்பெற்ற நிலையில்' அதை நன்றியோடு நினைவுகூர்ந்து பேசுகிறார். 'அன்பினால் அடியேன் ஆவியோடு ஆக்கை ஆனந்தமாய்க் கசிந்துருக, என்பரமல்லா இன்னருள் தந்தாய், யான் இதற்கிலனோர் கைம்மாறு' என்பார்.*

*இவ்வாறு தம்மிடம், ஆரா அன்பு அரும்பாத நிலை;*
*அரும்பித் தோன்ற வேண்டுமென்று வரம் வேண்டித் தவம் கிடந்த நிலை;*
*அது கைகூடிய நிலை;*
*கைகூடிய நிலையை நன்றியோடு நினைவு கூறும் நிலை*

*ஆகிய இந்த இந்த நான்கு நிலைகளில் வைத்துப் பரக்கப் பேசுகிறார்.*

*அடிகள் (மாணிக்கவாசகர்) வாழ்ந்த காலத்தில், சாத்திரத்தைச் சொல்லிச் சொல்லிச் சதிராட்டம் ஆடிவரும் சாத்திரக்காரர்களும் விரதத்தைச் சொல்லிச்சொல்லி வீண்வாதம் பேசிவரும் வேதியரும் சண்டமாருதச் சழியடித்து, ஆர்த்து, மாயாவாதம் பேசி மிண்டி வருவாரும், தத்தம் சமயமே*

சமயம் எனச் சண்டையிட்டுத் திரியும் சமயவாதிகளின் விடாப்பிடியான சொல்லாடல்களும், நாத்தழும்பேற நாத்திகம் பேசிவருவாரும், இவரது சிந்தையைச் சிதற அடித்தனர்.

இவ்வாறான பல்வேறு கருத்தமைவுகளும் அவரது சிந்தையில் புகுந்து, முட்டி மோதி மயக்கின; குழப்பின; மருட்டின. எதிலும் தெளிவு காண இயலாது காரிருளில் சிக்கித் திணறித் தவித்து நின்ற பொழுது, திருப்பெருந்துறையில், இறைவன் பேரொளிப் பிழம்பாக, ஞானகுரவனாக, எழுந்தருளி இவரை ஆட்கொள்கிறான். ஆட்கொண்ட அந்நிலையில், அவர் உடல் உறுப்புகள் எல்லாம் கொம்புத் தேனால் செய்யப் பட்டவையாயின.

அற்புதமான அமுத தாரைகளை எற்புத் துளை தோறும் இறைவன் ஏற்றினான். இனிய தேனையும் அமுதையும் மயிர்க்கால்தோறும் தேக்கிடப் பாய்ச்சினான்.

அந்த இன்பமயமான தேனை இனிதருந்தி, தேனினும் தெவிட்டாத திருவாசகத்தை, இசைத்து மகிழ்ந்தார் மணிவாசகர். இவ்வாறு, அந்த அருட் குரவனாகிய ஒளிப்பிழம்பின் வழிவந்ததொரு தெய்வீக நிகழ்ச்சியே இந்த வாதவூர் வாசக ஞானவரலாற்றின் தோற்றுவாயாகும்.

இந்த வரலாற்றில் அன்பின் ஆட்சியே அடிச் சரடாக ஆணி வேராகத் தொட்ட தொட்ட இடமெல்லாம் தன் ஊற்றுக் கண்ணைத் திறந்து காட்டும் சுனையாக அமைந்து அங்கிங்கெனாதபடி எங்கும் ஆட்சி செலுத்துவதைக் காணலாம். வாதவூரர், தன்னுடைய சுய வரலாறு எழுதுவது போல எழுதிக் காட்டுகிறார். இவ்வாறு இருளில் சிக்கித் திணறியபொழுது, என்றும் காணாத பேரின்பம் ஒன்று என் உள்ளத்தில் பெருகியது. கப்பிக் கிடந்த காரிருள் கடுகி விலகியது. துன்பம் தொலைந்தோடிவிட்டது. இது என்ன அதிசயம் , அற்புதம் என்று பார்த்தேன். என் வலிய உள்ளமாகிய இருட்டறை அன்பு மலிந்த ஞானப் பேரூராகிவிட்டது. எதனால்? குருந்தமர்ந்த பெருந்துறைப் பெருமான் திருவருளால் என்கிறார்.

’இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றுந் துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய் அன்பமைத்துச் சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே ஊராகக் கொண்டான் உவந்து’ என எளிமைப்படச் செய்யுள் நலஞ் சொட்டச் சொட்டப் பாடுவார்.

அவரது உள்ளத்தில், அன்பையே ஆசனமாக்கி ஜம்மென்று சிம்மாசனம் போட்டு, அமர்ந்து கொண்டானாம் இறைவன். இதையே ‘அன்பினுள் ஆகி அமரும் அரும்பொருள்’ என்பார் திருமூலர். ‘தகவுடையார் நெஞ்சிருக்கை கொண்டான் கண்டாய்’ என்பார் நாவுக்கரசர்.

ஆன்மா கலந்து ஆனந்திக்கக் கூடிய எல்லையும் முடிவுற்ற மேலான தத்துவத்தை உணர்ந்து அதில் ஒன்றி உருகிப்போன நிலையில்,

'நெக்கு நெக்கு உள்உருகி உருகி
நின்றும் இருந்துங் கிடந்தும் எழுந்தும்
நக்கும் அழுதுந் தொழுதும் வாழ்த்தி
நானா விதத்தாற் கூத்தும் நவிற்றிச்
செக்கர் போலுந் திருமேனி
திகழ நோக்கிச் சிலிர்சி லிர்த்துப்
புக்கு நிற்ப தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே'

என உள்ளம் உருகி, உயிர் பரவசமுற்றுப் பேசுகிறார்.

கங்குகரையில்லா அன்பாலும், ஆற்றாமையாலும் அடிகளின் உள்ளத்தில் எழுந்த வேட்கையின் விரைவாலும் சொற்கள் மலையிலிருந்து விழும் தேனருவி போல ஓடுகின்றன. பட்டை தீட்டி வெட்டி வைத்துள்ள வைரக்கல் கதிரொளிக்கு ஏற்பவும் காண்பார் நிற்கும் கோணத்திற்கு ஏற்பவும் ஜொலித்துக் காட்டுவது போல, கற்பவர் பயிற்சிக்கும், முயற்சிக்கும், முதிர்ச்சிக்கும் ஏற்பப் பொருள் படுமாறு பொருந்தி அமைந்துள்ள பாங்கையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

அன்பின் ஊற்றே அறமாய் விரிகிறது. அன்பின்றி அறமில்லை; அருளில்லை; இன்பமில்லை. அன்பினால் உருகி உருகி, மணிவாசகர் சிவமயமானார். இன்பம் நுகரும்பொழுது பெண்ணின்பால் ஆணின் அன்பு எவ்வாறு பதிந்து கலந்து சொக்கிச் சுகங்கண்டு நிற்குமோ அதுபோல அன்பும் அருளும் கலந்து சிவத்துடன் மோனச் சுகத்தில் ஒடுங்கவல்லார்க்கு உடலுணர்ச்சி இல்லாமல் தற்போதம் இழந்து சிற்போதத்துடன் கூடியணைத்துக் குலாவிக் கலந்து உலாவிச் சுகிக்கும் பேரின்பத்தை அன்பின் முதிர்ச்சியில் ஆட்பட்டுக் கிடந்த உணர்வை சீவன் சிவத்தில் அன்பால் கலந்து ஒன்றாகி நிற்கும் நிலையை ,

'சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்று
ஊடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய்'

என்று பாடி, பிறைசூடும் பெம்மானிடம் பின்னிக் கிடந்த பேரன்பிற்கு விலைகாணா வைரக் கிரீடம் சூட்டி மகிழ்கிறார். வாதவூரரின் உள்ளத்தில்

*வெள்ளமிட்டோடிய அன்புணர்வு உள்ளடங்காமல் போய்விட்ட நிலையில் அதன் போக்கு வீடாக வடிகாலாக அமைந்து வெளிவந்ததே இப்பாசுரம்.*



*அன்பு மனிதனை ஈசனாக்கி அருள்கிறது. உலகியலில், தாழ்ந்தவர் எனக் கருதநின்ற கண்ணப்பர், நந்தனார் , திருப்பாணாழ்வார் ஆகியோர், அன்பு ஒன்றினாலேயே அமரரும் தொழத்தகும் தெய்வநிலை பெற்றுள்ளனர். காளத்தி இறைவனைக் கண்ட ஆறே நாளில், 'தன் பரிசும் வினை இரண்டும் , சாரும் மலம் மூன்றும் அற' ஆராத பேரன்பினால் , தன் கண்ணை இழந்து அப்பிய கண்ணப்பரின் செயற்கரும் அன்புச்செயல், அடிகளின் உள்ளத்தை உருக்குகிறது. கட்கண்ணால் காணாத அந்நிகழ்வை, தன் நெஞ்சென்னும் உட்கண்ணால் கண்டு, நெக்குருகிப் பாடுகிறார். சென்று செவியளக்கும் அமுதன்ன சொன்மாலை கொண்டு அர்ச்சிக்கிறார்.*

*'கண்ணப்பன் ஒப்பதோர்*
*அன்பின்மை கண்டபின்*
*என்னப்பன் என்னொப்பில்*
*என்னையும் ஆட் கொண்டருளி*
*வண்ணப் பணித்தென்னை*
*வாவென்ற வான்கருணைச்*
*சுண்ணப்பொன் நீற்றற்கே*
*சென்றூதாய் கோத்தும்பீ'*

*கோடி பொன்னைக் கொண்டுவந்துக் கொட்டி அளந்தாலும் அவையனைத்தும் அன்பு மாளிகையின் மணிமுடியாகத் திகழும் இந்த ஒருபாடலுக்கு ஈடாகி நிற்குமா? எதிரேறி அமருமா?*

அடிகள் தன் பரபரப்பெல்லாம் ஒடுங்கிய நிலையில் சாத்வீக நிலையில் நின்று கோத்தும்பியைக்கண்டு இவ்வாறு பேசுகிறார். கண்டு பேசும் இந்தப் பேச்சின் மூலம் நம் நெஞ்சையெல்லாம் குளிரவைத்து அன்பில், அமைதியில் திளைக்க வைத்து விடுகிறார். 'வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும் பாதத்தான்' என்றெல்லாம் ஆழ்வார்களால் அர்ச்சிக்கப்படும் காக்கும் கடவுளாகிய திருமால் சிறந்த சிவபக்தர். நாளும் ஆயிரம் செந்தாமரை மலர் கொண்டு சிவபரம்பொருளை அர்ச்சித்து வழிபடுவதை வாடிக்கையாக்கிக் கொண்டிருந்த வள்ளல்.

இவ்வாறு நியமத்துடன் வழிபட்டு வரும் பொழுது அந்தத் திருமாலுக்கும் சோதனையொன்று வந்துவிட்டது. பூ ஒன்று குறைந்துபோனது. கொண்ட கொள்கையில் ஊற்றமும் உறுதிப்பாடும் கொண்ட திருமால், குறைந்த ஒரு பூவை ஈடுகட்டி அர்ச்சிக்க, செந்தாமரை மலராகிய, தன் கண்ணை, குருதி கொப்பளிக்கப் பிடுங்கி , ஆயிரம் மலர் அர்ச்சனையைக் குறைவற நிறைவு செய்து, அன்பின் மேலெல்லையை உலகுக்கு உணர்த்தினார். இதை,

'பங்கயம் ஆயிரம்<br>
பூவினிலோர் பூக்குறையத்<br>
தங்கண் இடந்தரன்<br>
சேவடிமேல் சாத்தலுமே<br>
சங்கரன் எம்பிரான்<br>
சக்கரம்மாற் கருளியவாறு<br>
எங்கும் பரவிநாம்<br>
தோணோக்கம் ஆடாமோ'

எனப் பேசுவார்.

மனிதன் தெய்வத்திடம் கொண்ட அன்பிற்கு கண்ணப்பரைக் காட்டி, தெய்வம் தெய்வத்திடம் காட்டும் அன்பிற்குத் திருமாலின் திறத்தைக் கூறி மனித நிலையிலும் தெய்வ நிலையிலும் அன்பு செய்யும் அற்புதத்தை இவ்வாறு அன்பும் உருகச் சித்தரித்துக் காட்டி அருளுவார்.



மணிவாசகர் கடவுளையே மண்ணில் நடமாட வைத்தவர். மணிநாவரின் தூய அன்பை, அன்பில் நனைந்து மலர்ந்த மணிவார்த்தைகளைக் கேட்டு மகிழ, பெருமான் மண்ணில் நடந்தான்; கொற்றாளாக மண் சுமந்தான்; பொன் மேனியில் பிரம்படிபட்டுப் புண்ணும் சுமந்தான். 'அரும்பிட்டுப் பச்சிலை இட்டு

ஆட்செய்யும் அன்னையவள் தரும் பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பில் கட்டுண்டே' என இந்த நிகழ்ச்சியைப் போற்றி எடுத்துப் பாராட்டிப் பேசுவார், குமரகுருபரர்.

டாக்டர் ஜி. யு. போப் கடிதம் எழுதத் தொடங்கும் பொழுது தலைப்பில் திருவாசகத்தொடர் ஒன்றைக் குறிப்பிட்டு எழுதிய பின்னரே எந்த கடிதத்தையும் எழுதத் தொடங்குவாராம். இவ்வாறு திருவாசகத் தொடரை எழுதும் பொழுது நெஞ்சம் நெகிழ்ந்து விழி வாசலிலே கண்ணீர் அரும்பு கட்டி நிற்குமாம். அரும்பு கட்டி நிற்கும் அந்த கண்ணீர் முத்துக்கள், எழுதும் கடிதத்தில் விழுந்து, எழுத்துக்களை மங்கலாக்குமாம்; அழிக்குமாம். எத்தனை பெரிய அனுபவ உணர்வு பாருங்கள்.



எனவே திருவாசகம் என்பது, வெறும் குறிக்கோள் காட்டும் வறட்டு வேதாந்தப் பனுவல் அல்ல; பாசுரம் அல்ல. உயிர்த்தொகுதி அனைத்தையும் அன்பில் நனைத்து, வாரி அணைத்து வாழ்விக்க வந்த வாழ்வு நூல். அது, உள்ளத்து உணர்வுகளில் எல்லாம் ஊடாடி, உணர்வு துடிக்கும் துடிப்பிலெல்லாம் புகுந்து புறப்பட்டுச் செயலாற்றும் நாகதாளியாய்க் குரு மூலிகையாய்ச் சஞ்சீவி மாத்திரையாய் அமைந்து, அல்லல் அறுத்து ஆட்கொள்ளும் ஆன்மீக மருந்தாகும். சுருங்கச் சொன்னால், அன்பால் அடித்தளம் அமைத்து, ஆர்வத்தால் சுவர் எழுப்பி, பக்தியால் கோபுரம் வளர்த்து, பெருகிவரும் கண்ணீரருவியால் குடமுழுக்காட்டி, செஞ்சொற் கவிதை மலர் கொண்டு அர்ச்சித்து நிறுவிய ஆலயம் தான் திருவாசகம்.

பெருக்கெடுத்துப் பேராறாய் தமிழர் வாழ்வியலில் வந்து கலந்த இத்திருவாசகத் தேனில், படிவோம், திளைப்போம்.

# பெண் கவிஞர்களின் பாடுபொருள் - அமெரிக்காவிலும் தமிழ் நாட்டிலும் [ஓர் அலசல்]

**மேனகா நரேஷ்,**
*நியூஜெர்சி, அமெரிக்கா.*



*மனித இனம் தன் பயணத்தைத் தொடங்கிய போது பெண்ணைத் தலைமையாகக் கொண்டுதான் இயங்கியிருக்க வேண்டும் என்பது மானுடவியல் ஆய்வாளர்களின் கருத்து. ஆதிக்குடிகளின் தலைவியாகப் பெண் செயல்பட்டு உணவைப் பகிர்ந்து அளிப்பது, விலங்குகளின் தோலைப் பதப்படுத்தி ஆடையாக்குவது, பிள்ளைகளைப் பெற்று அவர்களைப் பேணுவது என்று பன்முகத் தன்மையுடன் அவளுடைய ஆற்றலை வெளிப்படுத்தித் தலைவியாகச் சமுதாயத்தை வழி நடத்தினாள். இப்படித் தலைவியாய் இருந்த பெண் காலப்போக்கில் ஆண்களிடம் தலைமையைத் தவறவிட்டதற்குப் பல காரணங்கள் குறிப்பிடப்படுகின்றன. தலைமைப் பொறுப்பேற்ற ஆண்கள் தங்களுடைய ஆணாதிக்கச் சிந்தனைகளால் பெண்களைக் கட்டுப்படுத்தி அவர்களை வரையறுக்கப்பட்ட எல்லைகளுக்குள் செயல்பட கட்டாயப்படுத்தினர். மூடநம்பிக்கைகள், கல்வி மறுக்கப்படுதல், பாலினப் பாகுபாடு, அடக்குமுறைகள் என்று பல்வேறு தளங்களில் பெண்களை அடிமைப்படுத்தினாலும் தாங்களும் மதிநுட்பம் வாய்ந்தவர்கள் என்பதைப் பெண் சாதனையாளர்கள் நிரூபித்து வந்திருக்கிறார்கள். உலகின் முதல் விஞ்ஞானி ஆனாலும் முதல் விவசாயி ஆனாலும் அல்லது உலகின் முதல் கவிஞர் ஆனாலும் சரி அவர்கள் பெண்களாகவே இருந்திருக்கின்றனர். ரிக் வேத காலத்தில் 20 பெண்பாற் கவிஞர்கள் இருந்தனர் என்று "ஆர்சானுக்ரமணி" என்ற நூல் குறிப்பிடுகிறது. பக்தி இலக்கியக் காலத்தில் சைவ சமயத்தினை வளர்க்க காரைக்கால் அம்மையாரும், வைணவ சமயத்தினை வளர்க்க ஆண்டாளும் இயற்றிய பாடல்கள் பெரும்பங்கு வகித்தன. தமிழ் இலக்கியத்தின் பொற்காலம் எனச் சித்தரிக்கப்படும் சங்கக் காலத்தில் 32 பெண்பாற் புலவர்கள் இருந்ததாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். இவர்கள் இலக்கிய ஆளுமை மிக்கவர்களாகக் காணப்பட்டனர். சிறந்த பல தனிப்பாடல்களை, தொகுப்புக்களை இப்பெண்பாற் புலவர்கள் தமிழ் உலகுக்கு அளித்திருக்கின்றனர். பெண் கவிஞர்களில் அவ்வையார், ஆண்டாள், காரைக்கால் அம்மையார் போன்றோர் இறைக் கவிதைகள் பல புனைந்த போதும் சமூகம் சார்ந்த கவிதைகளும், பெண்ணியம் சார்ந்த கவிதைகளும் எழுதி இருக்கின்றனர்.*

கிமு 23ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மெசபோட்டேமிய அக்காடியப் பேரரசரான மன்னர் சர்க்கானின் மகள் எட்ஹெடுவானா பக்திப் பாடல்களை இயற்றியிருக்கிறார் என்கிறது வரலாறு. இவர் உலகின் முதல் பெண் எழுத்தாளராகவும் அறியப்படுகிறார். கி.மு ஏழாம் நூற்றாண்டில் கிரேக்கத்தில் வாழ்ந்த சாப்போ என்ற பெண் கவிஞர் வட்டாரமொழியில் தன்னுணர்ச்சிப் பாடல்களைப் பாடியவராக ஹோமருக்கு இணையாகக் கொண்டாடப்பட்டவர். பௌத்த இலக்கியத்தில் தேரி காதை என்ற நூலை இயற்றியவர்கள் பெண்கள் என்று அறியப்படுகிறார்கள். இது பாலி மொழியில் அமைந்த பௌத்த பிக்குணிகளின் பாடல்கள் அடங்கிய பனுவலாகும். ஆறாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட இந்தப் பாடல்கள் பெண்ணியம் குறித்த கருத்துக்களை உள்ளடக்கியதாகவும் இப்பாடல்கள் காட்டும் அனுபவங்களின் பரப்பு விரிவானது என்றும் ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறார்கள்.

மலையாளக் கவிஞர் சச்சிதானந்தன் எழுதிய "கருகிய கவிதை" என்ற கவிதை, தொடக்கம் முதல் நிறைவு வரை பெண் கவிதையின் வரலாற்று மொழியைப் பற்றியும் பெண் கவிஞர்களைப் பற்றியும் பேசுகிறது. ஒரு ஆண் கவிஞர் பெண் கவிஞர்களைப் பற்றி எழுதிய மலையாளக் கவிதையின் தமிழ் மொழியாக்கம் இது;

நான் கருகித் தீரவிருக்கும் ஒரு கவிதை

நீங்கள் யூகித்தது போலவே ஒரு பெண் பிள்ளையின் காதல் கவிதை

பெண் பிள்ளைகளின் காதல் கவிதைகள்

சில சமயங்களில் மட்டுமே நெருப்பிலிருந்து தப்புகின்றன

அப்பாவின் நெருப்பில் இருந்தும்

அண்ணனின் நெருப்பில் இருந்தும்

அம்மாவின் நெருப்பில் இருந்தும் கூட

அவர்களுடைய அம்மாவிடம் இருந்து பரவியது அந்த நெருப்பு

சில பெண் பிள்ளைகள் மட்டுமே இந்த நெருப்பிலிருந்து அரைகுறையாகத் தப்புகிறார்கள்

முழுவதும் கருகாத அவர்களை நாம் சில்வியா பிளாத் என்று

அக்மா தோவா என்று கமலா தாஸ் என்று அழைக்கிறோம்.

சில பெண் பிள்ளைகள் நெருப்பின் விதியிலிருந்து தப்புவதற்காகக்

*காதலுக்குப் பக்தியின் முகத்திரையை அணிவிக்கிறார்கள்.*

*அப்போது ஒரு மீரா பிறக்கிறாள்; ஒரு ஆண்டாள், ஒரு மகாதேவி அக்காவும் பிறக்கிறார்கள்.*

*ஒவ்வொரு கன்னியாஸ்திரியும் நித்திய இளைஞரான இயேசுவுக்கான கருகிய காதல் கவிதையே!*

*அபூர்வமாக அதி அபூர்வமாக ஒரு பெண் பிள்ளை உலகைப் பார்த்துச் சிரிக்கும் வலிமை பெறுகிறாள்.*

*பெண்களுக்கு மட்டும் சாத்தியமான மென்பரிவுடன்.*

*அப்போது நாம் அவளுக்கு சிம்போர்ஸ்கா என்று பெயரிடுகிறோம்.*

*அப்புறம் சாப்போ தப்பியது அவளுடைய காதல் கவிதைகளில்*

*பெண் பிள்ளைகளையே முன்வைத்துப் பேசியதால்தான்.*

*-"கருகிய கவிதை", தமிழில் சுகுமாரன்.*

*இந்தக் கவிதையில் குறிப்பிடப்படும் சில பெண் கவிஞர்கள் –*

*அமெரிக்கப் பெண் கவிஞர் சில்வியா பிளாத்-பாவ மன்னிப்பைத் தனது கவிதைகளில் முன்னெடுத்தவர்,*

*அக்மாதோவா- ரஷ்யாவில் பிறந்த பெண் கவிஞர்.காலம் மற்றும் நினைவுகளைப் பற்றிய தியானங்கள் இவருடைய பெரும்பாலான கவிதைகளின் பாடுபொருளாக இருக்கிறது.*

*கமலா தாஸ்- கேரளத்தில் பிறந்த பெண் கவிஞர் மற்றும் எழுத்தாளர். பெண்ணியம், சமூகம், அரசியல் என்று பலதரப்பட்ட கருத்துக்களை உள்ளடக்கிய கவிதைகள் மற்றும் கதைகளை எழுதியிருக்கிறார்.*

*மீராபாய்- வட இந்திய கிருஷ்ண பக்தையாக வைணவக் கவிஞராக அறியப்படுபவர்.*

*ஆண்டாள்- பெண் ஆழ்வார், கிருஷ்ண பக்தை, வைணவ சமயத்தினை வளர்க்க பாடல்கள் இயற்றி இருக்கிறார்.*

*மகாதேவி அக்கா- கன்னடத்தின் பெருமைமிக்க பெண் கவிஞர். சிவனைத் தனது கணவனாகப் பாவித்துப் பல கவிதைகள் எழுதியுள்ளார்.*

*சிம்போர்ஸ்கா- நோபல் பரிசு பெற்ற ஐரோப்பியப் பெண் கவிஞர்.*

சாப்போ- ஓரினக் காதலைப் பற்றிப் பாடிய கிரேக்கப் பெண் கவிஞர். இந்தக் கவிதையில் குறிப்பிடப்பட்டுள்ள பெண் கவிஞர்களைப் போலவே, இலக்கிய உலகின் இன்றைய சூழலிலும், சமூகம், வாழ்வியல், ஆணாதிக்க எதிர்ப்பு, பெண்ணியம், இறைவழிபாடு என்று பல தளங்களிலும் பெண் கவிஞர்கள் எழுதி வருகிறார்கள்.

அமெரிக்க எழுத்துலகம் பல பெண் கவிஞர்களின் படைப்புகளால் பெருமைபெற்று இருக்கிறது. சமூகம், பெண்ணுரிமை, அரசியல், பாலின பாகுபாடு, இனவெறி, பெண் சுதந்திரம், கறுப்பின மக்களின் போராட்டங்கள், வாழ்வியல் உள்ளிட்ட பல்வேறு கருப்பொருட்களை உள்ளடக்கியதாக அமெரிக்கப் பெண் கவிஞர்களின் கவிதைகள் இருக்கின்றன.




“வென் வி டெட் அவேக்கன்" என்ற தனது சுயசரிதைக் கட்டுரையில், கவிஞர் அட்ரியன் ரிச் 1940கள் மற்றும் 1950களில் ஆண் இலக்கியவாதிகளின் வழிகாட்டுதலின் கீழ் வளர்ந்ததையும், அவர்களிடமிருந்து அவர் ஆண் கவிஞர்களின் படைப்புகளை மட்டுமே வாசித்த அனுபவத்தையும் குறிப்பிடுகிறார். அந்தக் காலகட்டத்தில் பெண் கவிஞர்கள் புறக்கணிக்கப்பட்டதை அவர் வருத்தத்துடன் பதிவு செய்கிறார்.

19ஆம் நூற்றாண்டில் கவிதைகள் எழுதிய கிறிஸ்டினா ரொசெட்டி மற்றும் எமிலி டிக்கின்சன் அற்புதமான படைப்புகளைக் கொடுத்தும் உரிய அங்கீகாரம் கிடைக்காமலேயே இருந்திருக்கின்றனர். கிறிஸ்டினா ரொசெட்டியின் கவிதைகள், கோரப்படாத காதல், பாலியல், மரணம், நம்பிக்கை மற்றும் கடவுளின் அன்பு ஆகிய கருப்பொருட்களை உள்ளடக்கியவை. இவருடைய கவிதைகள் வெளிப்படுத்திய வேதனையை யாரும் கவனிக்கவில்லை.

*புகழ்பெற்ற விமர்சகர் ஆர்.பி. பிளாக்மூர் எமிலி டிக்கின்சனைப் பற்றி இப்படிக் குறிப்பிடுகிறார் "அவள் ஒரு தொழில்முறைக் கவிஞரோ அல்லது இளம் கவியோ இல்லை; சில பெண்கள் சமைப்பது அல்லது பின்னுவது போல, சளைக்காமல் எழுதிய ஒரு கவிஞர். வார்த்தைகளைக் கையாளும் அவளுடைய திறமையும், அவளது காலத்தின் கலாசார இக்கட்டான நிலையும் அவளை இருக்கைகளை அலங்கரிப்பதற்குப் பதிலாகக் கவிதைக்கு அழைத்துச் சென்றது." இவ்வாறு எமிலியின் கவிதைகளும் பெரும் கவனிப்பு கிடைக்காமலேயே இருந்திருக்கின்றன. எமிலி டிக்கின்சனின் கவிதைகள் மரணம், தனிமைப்படுத்தல் மற்றும் ஆன்மீகத்தின் கருப்பொருட்களால் நிரம்பியவை.*




*ஆனால் இன்று அமெரிக்கக் கவிதையின் தோற்றம் மாறிவிட்டது. மிக முக்கியமாக, அமெரிக்கப் பெண்களின் புத்திசாலித்தனமான மற்றும் சக்திவாய்ந்த கவிதைகளின் வெடிப்பின் மத்தியில் அமெரிக்க எழுத்துலகம் இருக்கிறது. அட்ரியன் ரிச்சின் தீராதத் தேடல், சில்வியா பிளாத்தின் சுடர் போன்ற ஆத்திரம், ஆனி செக்ஸ்டனின் வெட்கமற்ற வேதனை, எண்ணற்ற வாசகர்களைக் கிளறி, எண்ணற்ற எழுத்தாளர்களைப் பாதித்துள்ளது. டெனிஸ் லெவர்டோவ், மோனா வான் டுய்ன், மே ஸ்வென்சன், மேக்சின் குமின் மற்றும் கரோலின் கிசர் ஆகியோர் கொண்டாடப்படும் கவிஞர்களாக, முதன்மையான நிலையில் உள்ளனர். டயான் வகோஸ்கி ஒரு அமெரிக்க மிகையார்த்தவாதி {சர்ரியலிஸ்ட்}, மார்ஜ் பியர்சி உடலுக்கும் உடலுக்கும் இடையே உள்ள தொடர்புகளை விவரிக்கிறார், ஷரோன் ஓல்ட்ஸ் குடும்பக் காதல் மற்றும் வலியின் சிற்றின்பத்தை இயற்றுகிறார். குவென்டோலின் ப்ரூக்ஸ், லூசில்லே கிளிஃப்டன், ஆட்ரே லார்ட் , ஜியோவானி, ஜூன் ஜோர்டான், போன்ற*

கறுப்பின பெண் எழுத்தாளர்கள் காமம் ,காதல், கோபம் மற்றும் அவர்களுடைய தீர்க்கமான எண்ணங்களை வலிமையான மொழியில் கவிதைகளாக இயற்றும் ஆற்றல் வாய்ந்தவர்களாக இருக்கிறார்கள். மேலும் இந்தக் கவிஞர்கள் அனைவரும், பெண்களின் அனுபவத்தை வெளிப்படையாக, உலகளாவியதாகச் சித்தரிக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

அமெரிக்கக் கவி உலகின் தாரகைகளாக மின்னும் மூன்று கவிதாயினிகளின் படைப்புகளைக் குறித்து சிறிது விரிவாக இப்போது பார்க்கலாம்.

***சில்வியா பிளாத்:***



*சில்வியா பிளாத் -அக்டோபர் 27, 1932 – பிப்ரவரி 11, 1963. அமெரிக்கப் பெண் கவிஞர், நாவல், சிறுகதை எழுத்தாளர். அவரின் கவிதைகள் பரவலாக உலக மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சிறந்த உளவெளிப்பாட்டுக் கவிஞராகவும், பெண்ணியக் கவிஞராகவும் அறியப்படுபவர். பிளாத் உயிரோடிருக்கும்போது வந்த ஒரே கவிதைத் தொகுப்பு 'மாபெரும்சிலையும் மற்ற கவிதைகளும்' (Colossus and Other Poems). நுண் உணர்வுகளை அதற்கே உரித்தான வார்த்தைகளில் சொல்வதில் தனித்திறமை பெற்றவர். 'சில்வியா பிளாத்தின் கவிதைத் திரட்டு' (The Collected Poems of Sylvia Plath, 1982) என்ற நூல் 1982ஆம் ஆண்டிற்கான புலிட்சர் பரிசு பெற்றது. அவர் இறந்தபிறகு இந்த அங்கீகாரம் அவருக்குக் கிடைத்தது. 1950-ஆம் ஆண்டுகளின் பிற்பகுதியில் மற்றும் 1960-ஆம் ஆண்டுகளின் தொடக்கக் காலகட்டத்தில் எழுதப்பட்ட தன்னிலைக் கவிதைகளாகவே (confessional poetry) சில்வியா பிளாத்தின் கவிதைகள் அறியப்படுகின்றன. அவரது வாழ்வு அவரது கவிதைகளின் வழியே நம்மை வந்தடைந்து விடுகிறது.*

*சில்வியாவின் முதல் கவிதைத் தொகுப்பான 'கொலாசஸ்' 1960இல் வெளிவந்தது. இந்தத் தொகுப்பில் உள்ள கவிதைகள் சில்வியாவிடம் இருந்த விரக்தியையும், வெறுப்பு மனப்பாங்கையும், வன்முறை உணர்ச்சிகளையும், மரணத்தைக் கொண்டாடும் மனநிலையையும் எதிரொலித்தன. 1962ல் சில்வியா முழு வேகத்துடன் கவிதைகளைப் படைத்தார். உலகப் புகழ்பெற்ற அவருடைய கவிதைகளான 'லேடி லாசரஸ்', 'டாடி' ஆகியவை இந்த சமயத்தில்தான் எழுதப்பட்டன.*

*‘டாடி’ கவிதை, பிக்காஸோவின் பிரசித்தி பெற்ற கெர்னிகாவைப் போல கவிதை உலகின் பீடத்தை அலங்கரிக்கிறது என்று இலக்கிய விமர்சகரும் தத்துவவாதியுமான ஜார்ஜ் ஸ்டெய்னர் கூறினார். ‘டாடி’ கவிதை டாகாவ், ஆஷ்விஸ் ஆகிய வதை முகாம்களைப் பற்றியும் ஹிட்லரின் மெய்ன் காம்ஃப் பற்றியும் பேசுகிறது. சில்வியாவின் பின்புலம் ஜெர்மனியையும் ஆஸ்திரியாவையும் சார்ந்தது என்பதால் அவற்றின் தாக்கம் கூர்மையாக இந்தக் கவிதையில் வெளிப்படுகிறது.*

*‘லேடி லாசரஸ்’ சில்வியாவின் வாழ்க்கையைப் பிரதிபலித்த உணர்ச்சி மிகுந்த கவிதை. சரித்திரமும் அரசியலும் சில்வியாவைக் கவர்ந்த பேசுபொருட்களாய் இருந்தன. புத்தக அறிவுக்கு அப்பால் வாழ்க்கை ஏற்படுத்தித் தந்த அனுபவங்களின் சாரம் அவர் கவிதைகளை மெருகேற்றியது. பத்து வயதில் நிகழ்ந்துபோன தந்தையின் மரணம் கவிஞரைத் தொடர்ந்து துரத்துகிறது. அவருடைய இறுதி நாட்கள்வரை தொடர்ந்து பாதித்தபடியே இருந்திருக்கிறது.*

*என்மேல் பாய்கிறது சிறுத்தை ஒன்று*
*என் மரணம் அதனால் அமையும்*
*அதன் வேகத்தைத் தடுக்க இதயம் விரிப்பேன்*
*அதன் தாகம் தணிக்க ரத்தம் கொடுப்பேன்*

*இவ்வாறாக, மரணத்தைப் பல வகையில் கவிதைகளில் கொண்டாடுகிறார் சில்வியா பிளாத். சாதலும் ஏனைய கலைகளைப் போலொன்றே; அபூர்வ அழகோடு அதனை நான் நிகழ்த்துகிறேன் என்பதுதான் மரணம் குறித்த அவரது நிலைப்பாடாக இருந்தது. மரணத்திற்கு அடுத்ததாக ஒரு விரக்தி மனநிலையோடு இயற்கையை அணுகுகிற போக்கும் சில்வியாவின் கவிதைகளில் இருக்கின்றன.*

*சந்திரன் கதவு இல்லை*
*இது அதன் சொந்த உரிமையில் ஒரு முகம்*
*ஒரு முழங்கால் போல வெள்ளையான பயங்கரமான வருத்தம்*
*அது ஒரு இருண்ட குற்றம் போல் அதன் பின் கடலை இழுக்கிறது*
*அது அமைதியாக இருக்கிறது*
*முழுமையான விரக்தியின் வாய் பிளந்த இடைவெளியுடன்……*

*என்ற இவரது கவிதை வரிகளும் அவருக்கு வாழ்க்கையின் மீதிருந்த விரக்தி மனப்பான்மையைப் பிரதிபலிக்கிறது.*

*இப்படியாக, தனது படைப்புகளில் எல்லாவித வலிகளோடும் பயணித்துக் கொண்டிருந்த பிளாத் பிப்ரவரி 11, 1963 அன்று தற்கொலை செய்து கொண்டார்.*

*வாழும் போது நிம்மதியைத் தேடிய அவர் மரணத்தில்தான் அதைக் கண்டார் என்பது மிகப்பெரிய சோகம்.*

***மாயா ஏஞ்சலோ:***



*மாயா ஏஞ்சலோ - அமெரிக்க எழுத்தாளரும் கவிஞரும் ஆன மாயா ஏஞ்சலோ -(ஏப்ரல் 4, 1928 - மே 28, 2014) மார்குரைட் அன்னி ஜான்சன் என்ற இயற்பெயர் கொண்டவர். இவர் ஏழு சுயசரிதைகள், பல கவிதைப் புத்தகங்கள், கட்டுரைகள் எழுதியவர். குழந்தைப் பருவத்தில் இருந்து இருபது வயது வரையான அவரது வாழ்க்கை அனுபவங்களைக் கூறும் முதல் சுயசரிதைப் புனைவுத் தொடர் 'கூண்டுப் பறவை ஏன் பாடுவதில்லையென்று எனக்குத் தெரியும்' (1969), மிகச் சிறப்பானதாக அறியப்பட்டு சர்வதேச அங்கீகாரத்தையும் பாராட்டையும் பெற்றது. தனது தனிப்பட்ட வாழ்க்கையை அதில் பகிரங்கமாக்கினார் என்பது குறிப்பிடத்தக்கது. அவர் படைப்புகள், கறுப்பின மக்களின், குறிப்பாகப் பெண்களின் செய்தி ஊடகமாக அவர்களது கலாசாரத்தைப் பாதுகாத்தவையாகக் கருதப்படுகின்றன. இனவெறி , பெண்ணுரிமை, அடையாளம், குடும்பம், பயணம் ஆகியவையே இவரது கவிதைகளின் கருப்பொருள்களாக உள்ளன.*

*இவருடைய "பெண்ணுக்கான பணிகள்" என்ற கவிதையின் தமிழாக்கத்தை இப்போது பார்க்கலாம்.*

*"பெண்ணுக்கான பணிகள்"*
*பராமரிக்க எனக்குக் குழந்தைகள் உள்ளன*
*துவைக்கத் துணிகள் உள்ளன*
*மெழுகத் தரை உள்ளது*
*மளிகைப்பொருள் வாங்க கடைக்குப் போகவேணும்*
*பிறகு குஞ்சுக்கோழிப் பொரியல் செய்யவேணும்*
*குளிப்பாட்டக் குழந்தை காத்திருக்கிறது*
*துணைவருக்கு உணவளிக்க வேணும்*
*தோட்டத்தில் நான்தான் களை பிடுங்கவேணும்*
*தேய்த்து வைக்கத் துணிகள் உள்ளன*
*செல்லப்பிள்ளைகளுக்கு நானே உடுத்திவிடவேணும்*
*உணவு டப்பிகள் திறக்க*

*இந்தச் சிறிய குடிசையைத் துடைத்துப்பெருக்க*
*நோயாளியை அடுத்துக் கவனிக்க*
*பிறகு பருத்தியைத் தேர்ந்தெடுக்க*
*பிரகாசிக்கும் சூரியனே, என்மேல் ஜொலிப்பாயாக*
*மழையே, என்மீது பொழிவாயாக,*
*பனித்துளியே, என் மேல் பதமாய் விழுக,*
*என் நுதலை மீண்டும் குளிர்விப்பாயாக.*
*இனியும் எனக்கு ஓய்வு கிடைக்க*
*புயலே, உன் கொடுங்காற்றால் என்னை*
*இங்கிருந்து ஊதிப் பறக்கவிடுக*
*வானத்தில் என்னை மிதக்கவிடுக*
*பனிமழையே, மிருதுவாய்ப் பொழிக,*
*மூடுக என்னை*
*உன் வெண்குளிர் முத்தத்தால்,*
*இன்றிரவென்னை ஓய்வெடுக்க விடுக.*
*சூரியன், மழை, தொடுவான்,மலை, கடல், இலை,*
*வைரம் மினுங்கும் நட்சத்திரம், ஒளிரும் நிலா*
*உங்களையெல்லாம் மட்டுமே என்னவர்களாக*
*நான் சொந்தம் கொண்டாட முடிகிறது.*
*(‘Woman Work’)*

*இந்தக் கவிதையில் அடிமைத்தனம் மற்றும் பாலின சமத்துவமின்மை குறித்த இரட்டைக் கருத்துக்களை ஆராய்கிறார். கவி கறுப்பின இலக்கியத்தின் எழுச்சியாகவும் கறுப்பினப் பெண்ணிய இலக்கியத்தின் முன்னோடியாகவும் ஏஞ்சலோவின் படைப்புகள் உள்ளன. இவரது கவிதைகள் ஆப்பிரிக்க அமெரிக்கர்களின் கீதங்கள் என்று அழைக்கப்படுகின்றன. ஏஞ்சலோவின் வாழ்க்கையும் படைப்புகளும் உலகெங்கும் ஒடுக்கப்படும் மனிதரின் மீட்சிக்கான உத்வேகத்தைத் தரும் எனலாம்.*

***ஜாய் ஹார்ஜோ:***

*ஜாய் ஹார்ஜோ - இவர் ஒக்லஹோமாவின் டல்சாவில், மே 9, 1951 ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் நியூ மெக்சிகோ பல்கலைக்கழகத்தில் பி.ஏ பட்டமும், அயோவா எழுத்தாளர்கள் பட்டறையில் இருந்து முதுகலைப்பட்டமும் பெற்றவர். ஹார்ஜோ தன் மூதாதையர்களான செவ்விந்தியப் பூர்வகுடிகளின் வரலாறு, பெண்ணியம், ஜாஸ் இசை மற்றும் சமூக நீதி ஆகிய கருப்பொருட்களை உள்ளடக்கிய கவிதைகளை எழுதியிருக்கிறார். மேலும் அவரது எழுத்தில் அடிக்கடி பூர்வீகத் தொன்மங்கள், குறியீடுகள் மற்றும்*



*மதிப்புகளை இணைத்துக்கொண்டார். அவரது கவிதைகள் நிலப் பரப்புகளைக் குறித்தும், மூதாதையரை நினைவு கூறும் வகையிலும், எழுச்சியின் அவசியத்தை மையப்படுத்தியும் புனையப்பட்டுள்ளன. அவர் ஒருமுறை கருத்துத் தெரிவிக்கையில், "என் கடந்த கால மற்றும் வருங்கால மூதாதையர்களுக்கும், எனது தாய்நாட்டிற்கும், அனைத்துக் குரல்களுக்கும், அனைத்துப் பெண்களுக்கும், எனது பழங்குடியினர் அனைவருக்கும், அனைத்து மக்களுக்கும், இந்த பூமிக்கும், அதையும் தாண்டி அனைத்துத் தொடக்கங்கள் மற்றும் முடிவுகளுக்கும் நான் பொறுப்பு என்று நான் உணர்கிறேன். ஒரு விசித்திரமான விதத்தில் எழுத்து என்னை நம்புவதற்கும், பேசுவதற்கும், குரல் கொடுப்பதற்கும் விடுவிக்கிறது; ஏனென்றால் நான் அதைச் செய்தே தீர வேண்டும்; அது என் உயிர்." இப்படியாக இவர் எழுத்துப் பணியைக் குறித்துக் குறிப்பிடுகிறார். இவர் ஜூன் 2019 இல் அமெரிக்கக் கவிஞர் பரிசு பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.*

*ஹார்ஜோவின் முதல் கவிதைத் தொகுப்பு 1975 ஆம் ஆண்டு 'தி லாஸ்ட் சாங்' என்ற தலைப்பில் ஒன்பது கவிதைகள் அடங்கிய புத்தகமாக வெளியிடப்பட்டது. ஓக்லஹோமா மற்றும் நியூ மெக்சிகோவில் அமைக்கப்பட்ட இந்த ஆரம்பக்கால பாடல்கள், பழங்குடி மக்களின் வரலாற்றில் ஹார்ஜோவின் குறிப்பிடத்தக்க ஆர்வத்தை வெளிப்படுத்துகின்றன.*

*''கடைசிப் பாடல்'' என்ற கவிதையின் தமிழாக்கம்.*

*அவன் சொன்னான்*<br>
*உன்னால் எப்படித் தாங்க முடிகிறது*<br>
*சூடான இந்த ஓக்லஹோமா கோடைக்காலத்தை*<br>
*நீ எங்கே பிறந்தாய்*<br>
*இந்த ஈரமான அடர்ந்த காற்று*<br>
*என்னை திணறடிக்கிறது*<br>
*நான் திரும்பிச் செல்ல விரும்புகிறேன்*<br>
*நியூ மெக்சிகோவிற்கு*<br>
*அதுதான் ஒரே வழி*<br>
*ஒரு பழங்கால மந்திரத்தை*<br>
*எனக்கு சுவாசிக்கத் தெரியும்*<br>
*என் அம்மாவுக்குத் தெரிந்த மந்திரம்*

*வரலாற்றிலிருந்து வெளியே வந்தது*
*ஈரமான உயரமான புல்லில் இருந்து*
*அவள் வயிற்றில் என்னைச் சுமக்கும்போது நெய்யப்பட்டது*
*மேலும் எனக்கு வேறு வழி தெரியவில்லை*
*இந்த ஈரமான தெற்கு இரவு காற்றில்*

*என் குரலைச் கிரிக்கெட்டின் கோடைக்காலப் பாடல்களுடன் சூழ்ந்துகொள்வதைத் தவிர*

*ஒக்லஹோமா நான் பாடும் கடைசிப் பாடலாக இருக்கும்.*

*என்ற கவிதையில் தன் தொடக்கங்களுக்கே சென்றுவிடவேண்டும் என்கிற அவரது தவிப்பு வெளிப்படுகிறது. ஹார்ஜோ தனது கவிதைக்குப் பின்னால் உள்ள படைப்பு செயல்முறையை இவ்வாறாகப் பகிர்ந்துகொள்கிறார், "நான் ஒரு உணர்ச்சியின் விதை, ஒரு இடம், பின்னர் அங்கிருந்து நகர்கிறேன்... நான் கவிதையை ஒரு முடிவுப் புள்ளியாகப் பார்க்கவில்லை, அது பல ஆண்டுகளுக்கு முன்பே தொடங்கிய பயணமாக, ஒருவரின் கன்னத்தில் சூரிய நினைவின் மங்கலுடன், ஒரு குறிப்பிட்ட வாசனை, ஒரு வலி என்று ஏதோ சில உணர்வுகள் பல ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு கவிதையில் உச்சம் பெறும்." என்கிறார் ஹார்ஜோ.*

*இவ்வாறாக அமெரிக்கப் பெண் கவிஞர்கள் தங்கள் மன ஓட்டத்தையும், உணர்ச்சிகளையும், தங்கள் இனத்தின் வரலாறு, அடக்குமுறை, இனவெறி போன்ற கருத்துக்களையும் தாங்கள் வடித்த கவிதைகளில் பதிவு செய்து, வரலாற்றின் பக்கங்களில் நீங்காத புகழ்பெற்று விளங்குகின்றனர்.*

*தமிழ் இலக்கியப் பனுவல்களில் பதிவு செய்யப்பட்ட பெண்களின் குரல்களைத் தேடும்போது, நூற்றாண்டு கால இடைவெளியைக் காண முடிகிறது. எடுத்துக் காட்டாக, சங்க இலக்கியத்தில் 41 பெண் புலவர்களின் 181 பனுவல்களைப் பார்க்கிறோம். பின்னர் பக்தி இலக்கியக் காலத்தில் ஆண்டாள், காரைக்கால் அம்மையார் மற்றும் புனிதவதியின் இசைக் குரல்களைக் கேட்க முடிகிறது. விடுதலைக்குப் பின்னும் கூட சில பெண் குரல்களைச் சிறுகதை, புதினங்களில் கேட்க முடிகிறதே தவிர வேறு வலிமையான குரல்கள் ஒலிக்கவில்லை.*

*இந்த மௌனத்தை உடைத்தெறியும் விதமாக தமிழ்ப் பெண் கவிஞர்களின் குரலை 1980-களில் இருந்து நாம் திடீரெனக் கேட்கத் தொடங்குகிறோம். ஒடுக்கப்பட்ட பெண்களின் உட்குரலை முதன்முதலில் ரிஷி, க்ருஷாங்கினி போன்றோர் பதிவு செய்யத் தொடங்கினர். 1990களில் பெருந்தேவி, பிருந்தா, இளம்பிறை, கனிமொழி, தமயந்தி, சல்மா, வெண்ணிலா, பெரியநாயகி, மாலதி,*

*உமா மகேசுவரி என்ற பெரும் அணி வகுப்பைப் பார்க்கிறோம். இவர்களின் இரும்புக் குரல்கள் இருபது நூற்றாண்டுகால மௌனத்தை உடைக்கத் தொடங்கின. கவிஞரும், சிறந்த ஆய்வாளருமான சிற்பி பாலசுப்பிரமணியன் இந்த வரலாற்று நிகழ்வை இவ்வாறு வருணிக்கிறார்: "மொத்தத்தில் இன்று தமிழ்க் கவிதைக்குக் கணிசமான பங்களிப்பு பெண் கவிஞர்களால் நிகழ்ந்திருக்கிறது என்றே நான் நம்புகிறேன். உமாமகேசுவரியின் 'வெறும் பொழுது', இளம்பிறையின் 'முதல் மனுசி', அனாரின் 'உடல் பச்சை வனம்', செல்வ நாயகியின் 'பனிப்பொம்மைகள்', அ. வெண்ணிலாவின் 'நீரிலலையும் முகம்'-இவை பெண் கவிஞர்களின் படைப்பாற்றலுக்குச் சான்றளிக்கப் போதுமே. இன்னும் கோபக்காரக் கண்ணகிகளும், அழுத்தமான ஆற்றலுள்ள காரைக்கால் அம்மையார்களும், ஆதகங்கள் புனையும் ஆண்டாள்களும் நவீன தமிழ்க் கவிதையில் நிரம்பி இருக்கிறார்கள். பெருங்கவனத்துக்குரிய அற்புதமான கவிதைகள் தந்து வரும் பெண் கவிஞர்களே வளமான வரலாற்றுக்குச் சொந்தக்காரர்கள்."*

*பெண்ணியம், பெண் விடுதலை, பெண்ணின் உடல் மீதான ஆக்கிரமிப்பு, கர்ப்பங்கள், மாதவிடாய், பெண்ணின் அறிவு, பெண் சுதந்திரம் ஆகியவை பெரும்பாலான தமிழ்ப் பெண் கவிஞர்களின் பாடுபொருளாக இருக்கிறது.*

**தமிழ் நாட்டுப் பெண் கவிஞர்கள்**



சுகிர்தராணி


லீனா மணிமேகலை


இளம்பிறை


சல்மா


கனிமொழி


வெண்ணிலா



சக்திஜோதி


அனார்

*இந்தக் கட்டுரையில் கவிஞர் இரா. மீனாட்சி, கவிஞர் மாலதி மைத்ரி மற்றும் கவிஞர் குட்டி ரேவதி ஆகியோருடைய படைப்புகளைச் சற்று விரிவாக ஆராயலாம்.*

***இரா. மீனாட்சி:***



*இரா. மீனாட்சி- 1970 முதல் எழுதிவரும் இரா. மீனாட்சி இன்றைய தமிழ்ப் பெண் கவிஞர்களுள் முதன்மையானவர். 1944இல் விருது நகரில் பிறந்த இவர் மனையியல், சமூகவியல் பட்டங்கள் பெற்றவர். இளமைக் காலம் முதலே காந்தியச் சிந்தனை, சமூகத் தொண்டு, பெண்ணியச் சிந்தனை போன்றவற்றின் தாக்கம் இவருடைய தனிப்பட்ட சிந்தனைகளைச் செதுக்கின. நவீனத் தமிழ் இலக்கியத்தில், புதுக்கவிதைப் படைப்பில் குறிப்பிடத்தக்கவர். சி. சு. செல்லப்பாவின் 'எழுத்து' காலத்திலிருந்து எழுதத் தொடங்கி இன்றுவரை தொடர்ந்து எழுதி வருபவர். எழுபதுகளில் பெண்ணியத்தை அழுத்தமாய் கவிதை வழியாய் பதித்தவர். ''சௌந்தரா கைலாசத்தைத் தொடர்ந்து தமிழ்க் கவிதை உலகில் பெண் கவிஞராகப் புகுந்தவர், முதல் பெண் புதுக்கவிஞர்'' என்று கவிக்கோ அப்துல் ரகுமான் இரா. மீனாட்சியை மதிப்பிடுகிறார்.*

*இவரது முதல் கவிதைத் தொகுப்பான 'நெருஞ்சி' 1970-ல் வெளிவந்தது. 'சுடுபூக்கள்' கவிதைத் தொகுப்பு 1978-ல் வெளியானது. இதைத் தொடர்ந்து மேலும் 11 கவிதைத் தொகுப்பு நூல்களை இவர் வெளியிட்டுள்ளார்.*

*'நெருஞ்சி', 'சுடுபூக்கள்', 'தீபாவளிப்பகல்', 'மறுபயணம்' எனும் இவரது நான்கு கவிதைத் தொகுப்புகளையும் இணைத்து, 'மீனாட்சி கவிதைகள்' எனும் தொகுப்பு 2002இல் வெளிவந்துள்ளது. 2006இல் 'உதய நகரிலிருந்து' எனும் கவிதைத் தொகுப்பும் வெளிவந்துள்ளது.*

*தமிழில் இப்போது பரவலாக வெளியாகி வரவேற்புக்கும் திறனாய்வுக்கும் உட்பட்டு வருகின்ற பெண்ணியக் கவிதைகளின் மூல முன்னோடி இரா. மீனாட்சியே ஆவார். ஆயினும் தம்மைப் பெண்ணியம் எனும் ஒரு சார்பு நிலைக்கு உட்படுத்திக் கொள்ளாத ஒரு பொதுத் தன்மையையே தமக்குரிய இயல்பாகக் கொண்டிருக்கிறார்.*

*'சுடு பூக்கள்' என்னும் கவிதையில் ....*

> *'அவள் தானே வெளியேற*
> *அவளே தடையாகி,*
> *அவலத்துடிப்பு.*
> *மென்குரலில் வெளியழைப்பு.*
> *அவளுக்கோ அவலத்துடிப்பு*

*கழுத்து முடிச்சு பற்றுக்கோடா?*
*தடையுத்தரவு.*
*முள்வேலி.*
*கம்பிக்கயிறு கட்டுமானம்.*
*பூச்சிலை நெளிகிறது.*
*திரையாகி அலைகிறது.*
*துருப்பிடித்த*
*சன்னலுக்குத் தெரியுமா*
*சீலையின் தவிப்பு?'*

*பெண்ணின் அக விடுதலை வேட்கையானது, வேலிகளைக் கண்டு துவண்டு விழுவதும் அதன் உணர்வுகளை பெண் தானே எழுப்ப முயல்வதுமாய் அற்புதமாய் கவிதை வடித்திருக்கிறார்.*

*மதுரை நாயகியே என்னும் மற்றுமொன்றில்...*

*'மதுரை நாயகியே!*
*மீனாட்சித்தாயே!*
*படியேறி*
*நடை தாண்டி*
*குளம் சுற்றி*
*கிளி பார்த்து*
*உன்னருகே ஓடிவரும்*

*உன்மகனே ஏ*
*வழிவம்பு செய்கின்றான்*
*கோயிலிலும் காப்பில்லை*
*உன் காலத்தில்-*
*அழகி நீ!*
*எப்படி உலாப்போனாய்?'*

*என்று கேட்கிறார். இந்தக் கவிதை நமது சமூகத்தின் அழுக்கான முகத்தைக் காட்டுகிறது. சுடு பூக்கள் என்ற கவிதைத் தொகுப்பு, 1978 இல் வெளியான இக்கவிதையும், அதே தொகுப்பில் இடம்பெற்ற 'நாங்கள் நகரத்துக்குப்போகும் சின்னப்பெண்கள்' எனும் சமூக யதார்த்தம் தொனிக்கும் கவிதையும் ஒரே மனநிலையில் இயங்குகின்றன. பெண்ணுடல் மீது இயங்கும் புற தாக்குதல்களை மையமிட்ட கவிதைகள் இவை.*

*பல்வேறு வகையிலும் ஒடுக்குமுறைக்கு ஆளாகித் தவிக்கும் பெண்ணின் அவலங்கள், சமூக - பண்பாட்டுச் சீரழிவுகள் இவற்றுக்கெதிரான குரல் இவர் கவிதைகளில் ஒலிக்கிறது. தமது எழுத்தின் மீது எந்த இயக்கச் சார்பும் படியவிடாத இவர் மானுட விடுதலையிலும், மதிப்பீடுகளிலும், உலக ஒருமையிலும் நம்பிக்கை கொண்டு எழுதுபவர். ஒரு சிறுமிக்குரிய வியப்பு நிறைந்த விழிகளுடன் இயற்கையின் வனப்புகளைப் பார்ப்பதும் தமது அனுபவங்களின் சேமிப்பைத் தமக்கேயுரிய அழகுணர்ச்சி கொண்டு படைப்பதும் மீனாட்சி கவிதைகளின் தனித்தன்மைகள்.*

***மாலதி மைத்ரி:***



*மாலதி மைத்ரி -புதுச்சேரி மாநிலத்தைச் சேர்ந்த மாலதி மைத்ரி (பி. 1968) ஒரு தமிழ்க் கவிஞர், எழுத்தாளர். பெண்ணியத்தைக் கருப்பொருளாகக் கொண்ட கவிதைகளுக்காக அறியப்பட்டவர். விளிம்பு நிலை அரசியல், மனித உரிமை அரசியல் செயல்பாடுகளில் தொடர்ந்து ஈடுபடுபவர். 'அணங்கு' எனும் பெண்ணிய இலக்கிய இதழினை நடத்தி வருகிறார். மேலும் தமிழின் முதல் பெண்ணியப் பதிப்பகம் அணங்கின் பதிப்பாளர்.*

*சங்கராபரணி (2001), நீரின்றி அமையாது உலகு (2003), நீலி (2005), எனது மதுக்குடுவை (2012), முள்கம்பிகளால் கூடு பின்னும் பறவை (2017), கடல் ஒரு நீலச்சொல் (2019) என்பவை இவரது கவிதைத் தொகுதிகள்.*

*பெண்ணியம், தாய்மை, சமூக அவலங்கள், பெண்கள் மீது நிகழ்த்தப்படும் அடக்குமுறைகள், சாதியப் பாகுபாடுகள் ஆகியன இவரது பெரும்பாலான கவிதைகளின் பாடு பொருளாக உள்ளன. சங்கராபரணி', 'நீரின்றி அமையாது உலகு' என்ற தன் முதல் இரண்டு தொகுப்புகளில் கடல் என்பதை முக்கியமான கருப்பொருளாயும் கொண்டு கவிதைகள் புனைந்தவர், தனது மூன்றாவது தொகுப்பான 'நீலி'யில் உலகப்பொதுப் பிரச்சனைகளைப் பற்றி உரக்கப் பேசுகிறார்.*

*'வீடுகளால் ஆன இனம்' என்ற கவிதையில், பெண்கள் எதிர்கொள்ளும் குடும்ப வன்முறை குறித்து சொல்லியிருக்கிறார்.*

> *ஊரின் அனைத்து வீடுகளும்*
> *நடப்பட்ட பெண்களென நிற்கின்றன*
> *சாளரங்கள் கண்களாகவும் வாசல் யோனியாகவும்*

*யாரோ ஒரு ஆணிற்காக*
*ஆயுள் முழுவதும் காத்துக்கிடக்கின்றன*
*வயதுக்கேற்றபடித் தம் உறவுகளுக்காக*
*கொலைகாரன் திருடன் குடிகாரன் துரோகி*
*மோசடிக்காரன் ஊழல் செய்பவன் ஏமாற்றுபவன் விபச்சாரன்*
*கொடுங்கோலன் காமவெறியன் சாதிவெறியன் மதவெறியன் இனவெறியன்*
*இவர்கள் யாரையும் வீடு கைவிட்டுவிடுவதில்லை*
*அவரவருக்கான வீடு எப்போதும் இருக்கிறது'*

*வர்க்க ரீதியான சமூக ஏற்றத் தாழ்வுகளை வெளிப்படுத்தும் தலித் பெண்ணியம் குறித்தும் இவர் கவிதைகள் புனைந்திருக்கிறார்.*

*'படுகளம்' கவிதையில்,*

*'தெரு வாசலில் வெளிச்ச சட்டத்துக்கு அப்பால் நின்று குரலெடுப்போம்*
*'அம்மா அன்னம் போடுங்க'*
*கூடப்படிக்கும் பொடிசுகள் எட்டிப்பார்த்துவிட்டுச் செல்லும்'*

*இன்னொரு கவிதையில்,*

*ஏகாலி வந்திருக்காம்மா...*
*அம்பட்டவன் வந்திருக்காம்மா...*
*தோட்டி வந்திருக்காம்மா...*
*சக்கிலி வந்திருக்காம்மா...*
*குடிப்புள்ள வந்திருக்காம்மா...'*

*என்று சாதி விளிப்புகள் தான் சிறுமியாய் இருந்த காலத்தில் தன் கிராமத்தில் இருந்ததாய் சொல்கிறார். அடக்குமுறைகளைத் தாங்கிக் கொள்ள முடியாத தகிப்புகள், அவலங்களை எதிர்கொள்ள முடியாதத் தவிப்புகள், வலுக்கட்டாயமாகத் திணிக்கப்படுகின்றவற்றின் பின்னாலான அரசியல், இவையெல்லாம் மாலதி மைத்ரியின் கவிதைகளில் விவாதிக்கப்படும் பாடுபொருளாக இருக்கிறது.*

**குட்டி ரேவதி:**

*குட்டி ரேவதி, சித்த மருத்துவர், பாடலாசிரியர், பெண்ணிய ஆர்வலர், திரைப்பட இயக்குநர் என பன்முகங்களுடன் சமகாலத்தில் எழுதிவரும் பெண் படைப்பாளிகளுள் கவனிக்கத்தக்க ஒருவராக இயங்கிவருகிறார். கவித்துவமும் சிந்தனைத் தெளிவும் நிறைந்தவர். இவர் மூன்று கவிதை நூல்களை வெளியிட்டுள்ளார். பெண்களுக்கான இலக்கிய காலாண்டு இதழான*



பனிக்குடம் என்ற முதல் தமிழ் பெண்ணிய இதழின் ஆசிரியராகவும் உள்ளார். இவ்விதழில் பெண்ணிலக்கியவாதிகளின் படைப்புகளே அதிகம் வெளியிடப்படுவது குறிப்பிடத்தக்கது. சாதிய மறுப்பும் ஒழிப்பும்தான் பெண்ணுடலை அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கும் என்ற உணர்வுடன் தலித் பெண்ணியத்தைத் தனக்கேயான மொழியில் சித்தாந்தப்படுத்தி வருகிறார்.

''குட்டி ரேவதி கவிதைகள், சாதியப்படுத்தப்பட்ட மூடுண்ட மனித உடலை இயல்பூக்கத்துடன் திறக்கின்றன. காதல் வயப்படுகின்றன; காமம் துய்க்கின்றன; கோபம் கொள்கின்றன; வாழ்வின் வெம்மை பொறுக்க முடியாமல் போகும் போது நிழலைத் தேடும் மனநிலை, ஜீவிதத்தின் உயிர்த்துடிப்பு, பேரனுபவத்தைச் சுட்டிக்காட்டும் தன்மை; இருமை எதிர்வுகளை வெகு இயல்பாகப் படிமமாக்கிக் காட்டும் அழகியல் ஆகியவற்றால் தனித்து நிற்கின்றன. ஆனால் வடிவமைக்கப்பட்டு பெண்ணுக்கு வழங்கப்பட்ட பெண் சிந்தனையைப் பார்த்து கெக்கலி கொட்டிச் சிரிக்கின்றன. புதிய சொல்லாட்சிகளும், புதுப்புது சொல்லிணைகளும், மின் தெறிப்பாய்த் தெரிந்து மறையும் படிமங்களும் இக்கவிதைகளை நினைவு கூருமாறு செய்கின்றன. உத்வேகத்துடன் அலைவுறும் கவிதை மனமும், விடுதலை வேட்கையும் படிமங்களால் அழகாகக் கைகோர்க்கின்றன. இயல்பான தன்மையுடன் நடனமாடுகின்றன. இயற்கையின் மீதான அவதானிப்பு, பெண்ணியத்தின் குறியீடுகளாக மிளிர்கின்றன. பெண்ணிடமிருந்து விலக்கப்பட்ட சொற்களைத் துணிந்து உச்சரிக்கின்றன. இந்தப் பிரபஞ்சத்தையே ஒரு பெண்ணின் உடலாகவும், ஒரு பெண்ணின் உடலையே பிரபஞ்சமாகவும் உருவகித்துக் காட்டுகின்றன. கவிதை தோறும் படிமங்களும், தொடர் உருவகங்களும் காட்டாற்று வெள்ளமாய்ப் பிரவகித்துப் பாய்கின்றன. பின், வெள்ளம் வடிந்ததும் படியும் நுரையாய் மனத்தில் ஒட்டிக் கொள்கின்றன. கவிதையில் உற்பவிக்கும் உணர்ச்சிப் பெருக்கும் எழுச்சியும் கவிஞரிடமிருந்து வாசகனையும் தொற்றிக் கொள்கின்றன. உடலையே இயக்கமாக்கி அதை அதன் ஆதி நிலைக்குத் திருப்புகின்றன. தொல் அறத்தை மீட்டெடுக்கின்றன. வரலாற்றிலிருந்து உடலின் விடுதலை என்பது மோதலில் மட்டுமே நிகழ முடியும். அத்தகைய மோதலின் உக்கிரமான ஒரு புள்ளியிலிருந்து இக்கவிதைகள் பீறிடுகின்றன'' என்று இவரது கவிதைத்தொகுப்பு நூல்களைப்பற்றிய விளக்கம் இணையத்தில் பொதுவில் காணப்படுகிறது.

பெண்ணுடலை மையப்படுத்தி இவர் எழுதிய ஒரு கவிதையைப் பார்ப்போம்.

சகோதரி... இன்னும் பல முலைகளை
வனைந்தெடுப்போம்
கல்லால் அடித்தும் கத்தி முனையிலும்
உயிர்த்த முலைகளும் உண்ணப்படும் வேளையில்
உலகின் தானியங்களாகிப் போன
அவற்றைப் பேண வேலிகள் இல்லை
வல்லூறுகள் ஏன் தானியக்கொள்ளையில்?
வெயிலைத் தின்று வெட்டவெளியை நுகர்ந்து மூச்சிடும்
அக்கிழவியின் முலைகள்
அவளைப் பீடித்த பிசாசங்களாய்
தொங்கிக்கொண்டிருக்கின்றன
நெஞ்சை முட்டிக்கொண்டு
உலர்ந்த வரலாற்றின் எல்லை வரைபடங்களே
அப்பிசாசுகளும் ஆகவே சகோதரி
நீரருந்த நீர்க்குளங்களாயிருந்த முலைகளை
தீராத வேதனைக் கலயங்களாக்கோம்
ஒருநாளேனும் கற்களாக்கி அம்முலைகளை
கவண் கொண்டெறிவோம்
ஒற்றை முலையோடேனும் அலைவோம்
நம் சூரியனைத் தூக்கிச் சுமந்து.

என்ற கவிதை பெண்ணுடலின் மீது நிகழ்த்தப்படும் அத்துமீறல்களையும் அதை அவள் எழுச்சியுடன் எதிர்க்க வேண்டிய அவசியத்தையும் காட்சிப்படுத்துகின்றன.

எழுத்தாளர் பிருந்தா சீனிவாசன் குட்டி ரேவதியின் கவிதைகளைப்பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார் "குட்டி ரேவதியின் பெரும்பாலான கவிதைகளில் சூரியனும், நிலவும், வானமும், பூமியும், புல்லும், பறவைகளும், சிவப்பு நிறப் பூக்களும், காய்களும், கனிகளும், காடுகளும், காடுறை விலங்குகளும் தோன்றுகின்றன. சம காலப் பெண்ணை ஆதித் தாயுடன் இணைத்துப் பார்க்கும் முயற்சியாகவும் அவை தோற்றம் கொள்கின்றன. மரங்கள்தோறும் அசையும் தளிர்ப் பச்சை இலைகள் காற்றில் இசைத்துக்கொண்டே இருக்கின்றன. பெண்ணின் மீட்சிக்கான பாடலை. மீட்சி என்பதை உடலாக மட்டுமே குறுக்கிக்கொள்வது மனித மனத்தின் நோய்மை என்று சொல்லும்போதே உடலையும் கடக்க வேண்டியதன் கட்டாயத்தை குட்டி ரேவதியின் கவிதைகள் உணர்த்துகின்றன."

*நவீன தமிழ்க் கவிதை வெளியில், பெண் குரல், பெண் உடல், உடலரசியல் ஆகிய தளங்களில் ஒலிக்கும் ஏக்கம், நிராசை, காமம், மரணம், ஆற்றல், பரவசம், எழுச்சி, போராட்டம் போன்ற அனுபூதிகளால் குட்டி ரேவதி கவிதைகள் சாகாவரம் பெற்று இயங்குகின்றன.*



*இக்கட்டுரையின் மூலம் அமெரிக்கப் பெண் கவிஞர்களும் தமிழ்ப் பெண் கவிஞர்களும் பல்வேறு பாடுபொருள்களைக் கையாண்டாலும், பெண்ணியம் சார்ந்த கருத்துக்களை முன்னெடுத்து அதையே தங்களுடைய பெரும்பாலான கவிதைகளின் பாடுபொருளாகக் கையாள்கிறார்கள் என்பது புலப்படுகிறது. நவீனப் பெண் கவிஞர்கள் மட்டுமல்லாது பழங்காலப் பெண் கவிஞர்களும் பெண்ணியத்தைப் பாடு பொருளாக வைத்துப் பல பாடல்களை இயற்றியிருக்கிறார்கள். சங்க காலம் தொட்டு இன்று வரை பல பெண் கவிஞர்களின் பாடுபொருளாகப் பெண்ணியம் இருப்பது சமூகத்தில் பெண்கள் ஆணாதிக்க தந்திரங்களால் இன்றும் கட்டுப்படுத்தப்பட்டு இருக்கிறார்கள் என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. அதுமட்டுமின்றி, அவர்களுக்குத் தங்கள் விடுதலைக்கான போராட்டத்தின் தேவை இன்னமும் இருக்கிறது என்பதையும் தெளிவு படுத்துகிறது. பெண்ணியம் மட்டுமின்றி இயற்கை, காதல், உணர்வுகள், தாய்மை, சமத்துவம், அரசியல் போன்ற பாடுபொருள்களை உள்ளடக்கியும் பெண் கவிஞர்கள் கவிதைகள் இயற்றியிருக்கிறார்கள்.*

*அடக்குமுறைக்கு எதிரான கவிதைகளையும் பெண் கவிஞர்கள் புனைந்திருக்கிறார்கள். அமெரிக்காவில் இனவெறி என்றால் இந்தியாவில் சாதிவெறி. இப்படி மனிதனே மனிதனை வெறுக்கும் அவலச் செயல்பாடுகளைச் சாடும் விதத்தில் பெண் கவிஞர்கள் உணர்ச்சி பொங்கும் கவிதைகளை வடித்திருக்கிறார்கள். பாவேந்தர் பாரதிதாசன் அவர்களுடைய "எங்கெங்கு காணினும் சக்தியடா தம்பி ஏழுகடல் அவள் வண்ணமடா" என்ற பாடல் வரிகளுக்கு ஏற்ப பெண்ணானவள், சமூகச் சீர்கேடுகளைத் தட்டிக் கேட்கும் தாயாய், சகோதரியாய், தோழியாய், சக்தியின் ரூபமாய் பெண் கவிஞர்களின் மொழி வழியே தன் ஆதிக்கத்தைச் செலுத்திக் கொண்டுதான் இருக்கிறாள். மௌனமாய் ஆனால் மிகவும் வலிமையாய் அவள் குரல் ஒலித்துக் கொண்டே தான் இருக்கிறது.*

# பெருமைமிகு மதுரை கல்வெட்டுகள்

**(Friends of Madurai Trust, *மதுரை மூதூர் நுண் ஆய்விருக்கை மெய்நிகர் கூட்டத்தில் வழங்கப்பட்ட உரை,* 19 ஏப்ரல் 2023)**

***முனைவர் ப. தேவி அறிவுச் செல்வம்,***

*கோயில் கட்டிடக்கலை மற்றும்
சிற்பத்துறை கள ஆய்வாளர்*



***1.சங்க கால நடுகற்கள்:***

*A. புலிமான் கோம்பை நடுகற்கள்*

*காலம்: கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்கு முன்*

*எழுத்து: தமிழி*

*இருப்பிடம்: கீழடி அருங்காட்சியகம்*

*கல்வெட்டு செய்தி: இந்தியாவில் கிடைத்த காலத்தால் முந்திய தமிழி எழுத்துப்பொறிப்புடன் கூடிய முதல் சங்க கால நடு கற்கள் இவை. தொல்காப்பியத்தில் நிரை கோடலைக் குறிப்பிடும் ஆ கோள் என்ற சொல்லாட்சி இடம்பெற்ற நடுகல். வேள் ஊரைச் சேர்ந்த பதவன் அவ்வன் என்பவனுக்காக எடுக்கப்பட்ட நடுகல் மற்றும் கூடலூரில் நடந்த ஆகோள் பூசலில் உயிர் நீத்த பேடு தீயன் அந்தவனுக்கு எடுக்கப்பட்ட நடுகல், மூன்றாவதாக உள்ள நடுகல் எழுத்துக்கள் சரிவரத் தெரியவில்லை.*

*B. தாதப்பட்டி கல்வெட்டு*

*காலம் : கிமு மூன்று*

*எழுத்து: வட்டெழுத்து*

*இருப்பிடம்: கீழடி அருங்காட்சியகம்*

*கல்வெட்டு செய்தி: வீரன் ஒருவனின் நடுகல்*

***2. மீனாட்சிபுரம் மதுரை பெயர் சொல்லும் கல்வெட்டு:***

*காலம்: கிபி இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது*

*எழுத்து: தமிழி*

*இருப்பிடம்: மாங்குளம் அருகே மீனாட்சிபுரம் மலை ஒவா மலை கழுகுமலை*

கல்வெட்டு செய்தி:

கணிய் நந்தஸிரிய் குவன்

தம்மம் ஈத்த நெடுஞ்செழியன் ஸாலகன

இளஞ்சடிகன் தந்தைய் சடிகன்

செஈய பாளிய்.

நெடுஞ் செழியனுடைய சகலனாகிய, இளஞ்சாடிகனின் தந்தை சாடிகான் கணிய நந்தாஸிரியருக்கு பள்ளியைத் தர்மம் செய்துள்ளார்.நெடுஞ்செழியன் என்ற சங்க காலப் பாண்டிய மன்னனின் பெயர் பொறிக்கப்பெற்றுள்ள கல்வெட்டு.



புலிமான் கோம்பை மற்றும் தாதப்பட்டிக் கல்வெட்டுகள் கண்டுபிடிப்பதற்கு முன்பு வரை இக் கல்வெட்டே காலத்தால் முந்தைய பழந்தமிழ் எழுத்தாகக் கருதப்பெற்றுவந்தது.

ஸாலகன் என்ற சொல் மனைவியின் உடன் பிறந்தாளின் கணவனைக் குறிக்கும் சொல். இப்பொழுது வழக்கத்தில் சகலை என்று உள்ளது.

கல்வெட்டின் சிறப்பு: கல்வெட்டில் தனித்தனி உயிர், மெய் எழுத்துக்களும் உயிர் மெய் எழுத்துகளும் விரவிக் காணப்படுகின்றன. இது தமிழ்நாட்டில் எழுத்துமுறை மாறும் காலத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

தொல்காப்பியமும் மீனாட்சிபுரம் கல்வெட்டுகளும்: தொல்காப்பிய இலக்கணப்படி இங்கு உள்ள சில கல்வெட்டுகள் வெட்டப்பட்டுள்ளன. மெய்யின் இயற்கை புள்ளியோடு நிலையல் எகர ஒகரத்து இயற்கையும் அற்றே புள்ளியில்லா எல்லா மெய்யும் உருவுவாகி அகரமொடு உயிர்த்தலும் ஏனை உயிரோடு உருவு திரிந்து உயிர்த்தலும்- தொல் எழுத்து- நூல் மரபு- 15, 16, 17.

***3. வைகைக்கரை கல்வெட்டு/நீர்ப்பாசனம் கல்வெட்டு:***

*காலம் : 1300 வருடங்களுக்கு முன்பாக வைகையில் மதகு அமைத்து நீர்ப் பாசனம் செய்த நின்றசீர் நெடுமாறன் கல்வெட்டு.*

*இருப்பிடம்: மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில் அருங்காட்சியகத்தில் உள்ளது.*

*கிபி 620-650 வரை ஆட்சி செய்ததாகக் கருதப்படும் கூன் பாண்டியன் என்னும் நின்றசீர் நெடுமாறனின் விருது பெயரான அரிகேசரி என்னும் பெயர் பொறித்த கல்வெட்டு. 1.2 மீட்டர் நீளமும் 75 செண்டிமீட்டர் அகலமும் கொண்ட பலகைக் கல்லில் 14 வரிகள் கொண்ட கிரந்தம் கலந்த வட்டெழுத்துக் கல்வெட்டானது வைகை கரையில் சலவை செய்யும் கல்லாக தலைகீழாகக் கவிழ்ந்து இருந்துள்ளது. இக்கல்வெட்டானது 1961இல் தொல்பொருள் ஆய்வாளர் பேரா.கே. வி இராமன் என்பவரால் கண்டறியப்பட்டுள்ளது.*

*1.பாண்ட்ய குலமணி ப்ரதிபனாய் ப்ரதூர் பாவஞ்செ*

*2. ய்து விக்ரமங்கலாலரைசடக்கி மறங்*

*3. கெடுத்தறம் பெருக்கி அக்ரஹாரம் பல*

*4. செய்த பரிமித மாகிய ஹிரண்ய கர்ப்ப க.*

*5. ஸஹஸ்ர துலாபாரத்து மஹா தாநங்களாற்*

*6. கலி கடிந்து மங்கலபுரந் நகரமாக்கி வீ*

*7. ற்றிருந்து செங்கோனடாவி நின்ற கோச்சே*

*8. ந்தன் மற்றம்பதாவது ராஜ்ய ஸம்வத்ஸர*

*9. ஞ் செல்லா நிற்க வைகை சோன் மதகு ம*

*10. டுத் தரிகேசரியானெனப் பியரிட்டு காரோட*

*11. வித்துக் காளுத்தை ஓடை அடைத்து*

*12.நாடு பருத்திக்குடி.....*

*13. குடுக்க ப்ப......*

*14. ……….*

*கல்வெட்டு செய்தி: இப்பாண்டிய மன்னன் தனது ஐம்பதாவது ஆட்சி ஆண்டில் மங்கலபுரம் என்ற நகரை உருவாக்கியதாகவும், வைகைக் கரையில் தனது விருது*

பெயரான அரிகேசரி என்ற பெயர் பொறித்த மதகு கட்டி அதன் கால்களைப் பிரித்து (திருச்சுழி வீரசோழன் வரை தண்ணீர் கொண்டு சென்றதாகவும்) அக்ரஹாரம் பல செய்தும், ஹிரண்ய கர்ப்பம், கோஸஹஸ்ரம், துலாபாரம் போன்ற பல தானங்கள் செய்ததாகவும், பாண்டியர் குலத்திற்கு மணி போன்றவராக இருந்தவர் என்றும் பல அறச் செயல்களைச் செய்ததாகவும் இக்கல்வெட்டு செய்தியானது கூறுகிறது (தரவு: *Epigraphica indica vol 38:* பக்கம் *27-32).*



### *4. கும்பாபிஷேகம் கல்வெட்டு:*

*காலம்: கிபி 770*

*எழுத்து: வட்டெழுத்து*

இருப்பிடம் *: யானைமலை அருள்மிகு யோக நரசிங்கம் பெருமாள் கோயில் கருவறை முகப்பு சுவர்*

கல்வெட்டு செய்தி*: 13 வரிகள் கொண்ட கல்வெட்டு செய்தியானது மாறன் சடையன் என்ற பாண்டிய மன்னனின் உத்திர மந்திரி மாறன்காரி இக்கற்றளியை செய்வித்துக் கொண்டிருக்கும் பொழுது சொர்க்கலோகம் அடைய அவன் தம்பி மாறன் எயினன் இக்கோயிலுக்கு முகமண்டபம் எடுத்து நீர் தெளித்தான்(கும்பாபிஷேகம்) என்று தெரிவிக்கிறது.*

### *5. கலியாண்டு கல்வெட்டு:*

*(முன்பு நம் நாட்டில் கணக்கிடப்பட்ட ஆண்டு கலியாண்டு. உதாரணம்: இந்த வருடம் கலியாண்டு 2023+3101(கலியாண்டு)=5124)*

*காலம்: கிபி 770*

*எழுத்து: கிரந்தம்*

*இருப்பிடம் : யானைமலை அருள்மிகு யோக நரசிங்கம் பெருமாள் கோயில் கருவறை முகப்பு சுவர்*

*கல்வெட்டு செய்தி: 10 வரிகள் கொண்ட கல்வெட்டு செய்தியானது மாறன் சடையன் என்ற பாண்டிய மன்னனின் உத்திர மந்திரி மாறன்காரி இக்கற்றளியை விஷ்ணுவிற்கு எடுத்ததோடு பிராமணர் பலரைக் கொண்டு அக்கிரகாரம் ஒன்றையும் அமைத்ததாகத் தெரிவிக்கிறது.*

***6. தாய் தெய்வ கோயில் பற்றிய கல்வெட்டு:***

*காலம்: கிபி 773 ஆம் ஆண்டு.*

*எழுத்து: வட்டெழுத்து*

*இருப்பிடம்: திருப்பரங்குன்றம் வடபரங்குன்றம் முருகன் கோயில் அர்த்தமண்டபத் தூண்*

*கல்வெட்டு செய்தி: 14 வரிகள் கொண்டுள்ளது, தமிழகத்தில் சங்ககாலத்திலிருந்து கிபி 10ம் நூற்றாண்டு வரை வழிபாட்டிலிருந்த ஒரு பெண் தெய்வம் ஜேஷ்டா எனும் மூதேவி. கிபி 773 ஆம் ஆண்டில் ஜடில பராந்தகன் என்னும் பாண்டிய மன்னனின் படைத் தளபதியான சாத்தன் கணபதியின் மனைவி நக்கன்கொற்றி ஜேஸ்டா தேவிக்கும் துர்க்கைக்கும் குடைவரைக் கோயில் எடுப்பித்ததாக கல்வெட்டு செய்தி தெரிவிக்கிறது.*

***7. யானைமலை கல்வெட்டு - புனரமைத்தல் கல்வெட்டு***

*காலம்: கிபி 8*

*எழுத்து : வட்டெழுத்து*

*இருப்பிடம்: யானைமலை முருகன் குடைவரைக் கோயில்/ லாடன் கோயில் /யோக நரசிம்மர் கோயிலை ஒட்டி உள்ளது. கல்வெட்டு இருக்கும் இடம்- முருகன் குடைவரைக் கோயிலின் வெளிப்புறத்தில் வடக்கு வெளிச் சுவரில் உள்ளது.*

*கல்வெட்டு செய்தி: நான்கு வரிகள் கொண்ட வட்டெழுத்து கல்வெட்டு தெரிவிக்கும் செய்தியானது வட்டக்குறிச்சி என்ற ஊரைச் சார்ந்த நம்பிரான் பட்ட சோமாசி பரி ராஜகர் என்பவர் இக் குடவரையைப் புதுப்பித்ததைக் குறிக்கும் விதமாக புதுக்கு என்ற தமிழ்ச் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.*

***8. தூங்குதலை நடுகல்:***

*போரில் மன்னர்கள் வெற்றி அடைய வேண்டி காளி அல்லது கொற்றவைக்கு தன்னுடைய உயிரினை தன் கையால் தன் கழுத்தை அறுத்துக் கொண்டு உயிர்ப்பலி கொடுத்தவர்களுக்கு எடுக்கப்படும் நடு கல்லே தூங்குதலை நடுகல். அம்மாதிரியான இரண்டு தூங்குதலை நடு கற்கள் மடப்புரம் காளி கோயிலில் கிபி எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்து கல்வெட்டுடன் ஒன்றும் கிபி பத்தாம் நூற்றாண்டு தமிழ் எழுத்து கல்வெட்டுகளுடன் ஒன்றும் உள்ளது. இதில் தூங்குதலை சீவல்லவன் தூங்குதலை சித்திர சரிதன் என்று உயிர்ப்பலி கொடுத்தவர்களின் பெயர்கள் கல்வெட்டுடன் நடுகற்களாக 1200 வருடங்களுக்கு முன்பு செதுக்கப்பட்டு வழிபாட்டில் இருந்துள்ளது. இப்பொழுது சிறிது சேதம் ஏற்பட்டதால் கோயில் வளாகத்தின் உள்ளே பூட்டிய அறையில் கிடைக்கிறது. இப்பொழுது நாம் கொடுக்கும் வேண்டுதல் கூட இந்த மரபின் தொடர்ச்சி எனலாம்.*



***9. சூரிய கிரகண கல்வெட்டு:***

*காலம்: கிபி 940*

*எழுத்து: வட்டெழுத்து.,கல்வெட்டு செய்தி: பாண்டிய நாட்டில் சோழர்களின் கல்வெட்டானது*

*இருப்பிடம்: அருள்மிகு யோக நரசிங்கம் பெருமாள் கோயில். மதுரை யானைமலை யோக நரசிங்கம் பெருமாள் கோயிலின் வடபுறம் உள்ள குடைவரை பாறை மீது உள்ளது.*

*கல்வெட்டு செய்தி: கிபி 940 ல் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது பராந்தக சோழ மன்னரின் அதிகாரி மருதூர் மருதூருடையான் அருணி திகலியன், பெருமாளுக்கு தானம் ஒன்று செய்தும், கலியனேரி என்ற ஏரியை ஆழப்படுத்தி அதிலிருந்து 300 கலம் நெல்லை கோயிலுக்குக் கொடுத்தும், அதில் 150 கலம்*

*நெல்லை கொண்டு அக் கோவிலில் வேதம் ஓதும் பிராமணர்கள் ஐந்து நபர்களுக்கு உயர்வகை உணவு அளிக்கப்பட்டதையும் இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.*

***10. திருவிழாக் கல்வெட்டுகள்:***

*a.பங்குனி உத்திரத் திருவிழா*

*காலம்: சோழன் தலை கொண்ட வீரபாண்டியன் கிபி ஒன்பதாம் நூற்றாண்டு*
*திருவிழா பெயர்- பங்குனி உத்திர திருவிழா*

*இருப்பிடம்: அருள்மிகு மணிகண்டேஸ்வரர் கோயில் மேற்கு சுவர் கீழமாத்தூர்*

*கல்வெட்டு செய்தி: பங்குனி உத்திர திருவிழாவுக்கு கண்டழிவாகவும் இப்பரிசு*

*b.சித்திரைத் திருவிழா*

*காலம்: பாண்டியர் ஆட்சி ஆண்டு 3*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: அழகர் கோயில் முதல் திருச்சுற்றுச் சுவர் மேற்கு வெளிப்புறம்*

*திருவிழா பெயர்- சித்திரைத் திருநாள், ஐப்பசி திருநாள்.*

*கல்வெட்டு செய்தி: இவ்விறைவர்க்கு நடைபெறும் திருவாடித் திருவிழா, ஐப்பசித் திருநாள், சித்திரைத் திருநாள் முதலானவற்றிற்கு மடப்புற இறையிலியாக இடப்பட்ட இரண்டே கால் வேலி நிலம் பற்றிய செய்தியினைத் தெரிவிக்கிறது ( தரவு- அழகர்கோவில் கல்வெட்டுகள் - பக்கம் 53).*

*c.மார்கழித் திருவிழா*

*காலம்: கிபி 13ஆம் நூற்றாண்டு*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: குன்னத்தூர் பெருமாள் கோயில் நுழைவாயில் மண்டபம் துண்டு கல்வெட்டு.*

*கல்வெட்டு செய்தி: திருவிழா பெயர்- மார்கழித் திருவிழா. மார்கழித் திருவிழா நடத்துவதற்காகக் கொடை வழங்கப்பட்டிருந்ததை இக் கல்வெட்டு புலப்படுத்துகின்றது (தரவு- மதுரை மாவட்ட கல்வெட்டுகள் தொகுதி 1, பக்கம்-296).*

***11.கல்லணை/ அணை பற்றிய கல்வெட்டு:***

*காலம்: கிபி 1100 முதல் கிபி 1124*

*அணை இருப்பிடம்: மதுரைக்கு அருகே குருவித்துறை அருள்மிகு சித்திரவரத வல்லப பெருமாள் கோயில் அருகே உள்ளது.*

*கல்வெட்டு இருப்பிடம்: அருள்மிகு சித்ரவரத வல்லப பெருமாள் கோயில்*

*கல்வெட்டு செய்தி: திருமடந்தையும் ஜயமடந்தையும் என்ற மெய்க்கீர்த்தி கொண்ட கிபி 1100 முதல் கிபி 1124 வரை பாண்டிய மண்டலத்தை ஆட்சி செய்த ஜடாவர்மன் ஸ்ரீவல்லப பாண்டியன் கட்டிய கல்லணை. கிபி 1117 வாக்கில் இம்மன்னன் வைகை ஆற்றின் குறுக்கே கருங்கல்லால் ஆன அணையை அதாவது கல்லணையை ஏற்படுத்தி அருகில் அதன் சுற்று வட்டாரத்தில் உள்ள கிராமங்களின் விவசாயத்திற்காகவும் மற்ற தேவைக்காகவும் வைகை நீரானது பயன்படுமாறு கட்டுகிறார். இதில் மூன்று மதகுகளை அமைத்து அதிலிருந்து கால்களைப் பிரித்து சுற்றுவட்டார கிராமத்திற்கு நீரினை அனுப்புகிறார். அப்போது தொண்டை மண்டலத்திலிருந்து இந்த கால்களுக்கு அருகே அவர் ஒரு கால்வாயைப் பிரித்துக் கொள்கிறார். அது ஒரு பஞ்சாயத்தாக மாறி மன்னனின் பார்வைக்குச் செல்கிறது. இதற்கு ஒரு தீர்ப்பை மன்னர் வழங்குகிறார். அந்த தீர்ப்பின் விவரம் கல்வெட்டாக வெட்டப்பட்டு உள்ளது. கிட்டத்தட்ட 1000 ஆண்டுப் பழமையான பாண்டியர் அணை இன்றும் பயன்பாட்டில் உள்ளது, அக்கால கட்டத்திலேயே பாண்டியர்கள் நீர் மேலாண்மையில் எவ்வளவு சிறப்புற்று விளங்கி இருக்கின்றனர் என்பதை இன்றும் காட்டும் விதமாகக் கல்லணை சான்றாக நிற்கின்றது (தரவு-தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி 14 பக்கம் 141).*

***12. பெண்கள் வழங்கிய கொடை:***

*a.திருவாதவூர் சிவன் கோயில் கல்வெட்டு*

*காலம்: கிபி 1297*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: திருவாதவூர் சிவன் கோயில்*

*கல்வெட்டு செய்தி: கூத்தாண்டாளா மகள் அழகியநாச்சி தாயாண்டாள் என்ற பெண்கள் மாறவர்மன் குலசேகர பாண்டியன் ஆணைப்படி திருவாதவூர் திருமறை நாயனாரின் பழந் தேவதானமான பனங்காடிப் பற்றில் இறையிலியாக நிலங்கள் அளித்துள்ளனர். மேலும் இக்கோயில் தேவரடியார்*

*ஆளால சுந்தர நங்கை சந்திரசேகர், கௌரி செப்புத் திருமேனிகளைச் செய்வித்து திருவீதி எழுந்தருளச் செய்துள்ளார்.*

*b.திருமங்கலம் முத்துராமலிங்கபுரம்.*

*காலம்: கிபி 10 ஆம் நூற்றாண்டு*

*எழுத்து: வட்டெழுத்து*

*இருப்பிடம்: பாண்டியன் தோப்பு கால்வாய்க் கரையில் உள்ள தனிக்கல்.*

*கல்வெட்டு செய்தி: சிவன் கோயில் ஒன்றிற்காக வைய்யூர் கோன் மகள் சாத்தம் பெற்றி ஆறுமா நிலம் கொடை அளித்துள்ளார். மற்றும்;*

*c.அழகர் கோயிலுக்கு கிபி 1222ல் சுந்தரபாண்டிய மன்னரின் மனைவி திருவுடையாள் 8 திருநொந்தா விளக்குகள் முட்டாமல் எரிப்பதற்காக (விளக்கு புறம் என்ற பெயரில்) நில தானம் கொடுத்துள்ளார் என்று தமிழகத்தில் எழுதப்பட்டுள்ள அக் கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டு செய்தி தெரிவிக்கிறது.*

***13. இஸ்லாமியர் கொடை***

*காலம்: கிபி1297*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: திருவாதவூர் சிவன் கோயில்*

*கல்வெட்டு செய்தி: இக்கோயிலுக்கு விளக்கு எரிக்க தானம் கொடுத்த செய்தி உள்ளது. தானத்தைக் கொடுத்தவர் கி.பி.1297 ல் இறைகண்டன் ராகுத்தன் என்ற இஸ்லாமியர்.*



***14. அளவுகோல் கல்வெட்டுகள்***

*a. இருபத்து நாலடியான சுந்தரபாண்டியன் கோல்*

*காலம்: கிபி: 13 இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்.*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: திருவாதவூர் திருமறை நாதசுவாமி கோயில் திருச்சுற்று மாளிகை தென்சுவர் வெளிப்புறம்.*

*செய்தி: இறையிலியாகக் கொடுத்த நிலத்தினை அளக்க இருபத்து நாலடியான சுந்தரபாண்டியன் கோல் என்ற நிலம் அளக்கும் கோல் இக்கல்வெட்டில்*

குறிப்பிடப்பட்டுள்ளது (தரவு: மதுரை மாவட்ட கல்வெட்டுகள் தொகுதி 1, பக்கம்: 83)

b. வீரபாண்டியன் முகத்தலளவை.

காலம்: கிபி: 13 இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்.

எழுத்து: தமிழ்

இருப்பிடம்: திருவாதவூர் திருமறை நாதசுவாமி கோயில் திருச்சுற்று மாளிகை தென்சுவர் வெளிப்புறம்

செய்தி: வீரபாண்டியன் முகத்தலளவை என்று உள்ளது (தரவு: மதுரை மாவட்ட கல்வெட்டுகள் தொகுதி 1, பக்கம்: 86).

c. மலைக்குடி மலைமேல் கோல்.

காலம்: கிபி 13 முதலாம் மாறவர்ம சுந்தரபாண்டியன்

எழுத்து: தமிழ்

இருப்பிடம்: ஆமூர் சிவன் கோயில் தென்புற அதிட்டான பகுதி

செய்தி: மலைக்குடி மலைமேல் கோல் என்ற அளவுகோலால் அளந்த நிலத்தின் எல்லைகள் சொல்லப்படுகின்றன (தரவு: மதுரை மாவட்ட கல்வெட்டுகள் தொகுதி 1, பக்கம் :175).

d. கடமையிறுக்கும் கோல்.

காலம்: கிபி 13 பிற்காலப் பாண்டியர்கள்

எழுத்து: தமிழ்

இருப்பிடம்: யானைமலை யோக நரசிங்கப் பெருமாள் கோயில் வடபுற வெளிச்சுவர் உள்பக்கம்.

செய்தி: சிறு வாலியூரில் நிலக்கொடை திருவோடைப் புறமாக இறையிலி அளிக்கப்பட்டதை கடமையிறுக்கும் கோலால் நிலம் அளக்கப்பட்டதையும் கூறுகின்றன (தரவு: மதுரை மாவட்ட கல்வெட்டுகள் தொகுதி 1, பக்கம்: 275).

e. கால கண்ட தேவன் அளவை.

காலம்: கிபி: 1296 பிற்காலப் பாண்டியர் மாறவர்மன் குலசேகரன்.

எழுத்து: தமிழ்

*இருப்பிடம்: குன்னத்தூர் சிவன் கோயில் அர்த்தமண்டப வடக்குச் சுவர்*

*செய்தி: தனியானை ஈஸ்வரமுடையார் கோயிலுக்குக் குன்றத்தூர் குளக் கிழ நாட்டுக் காவனூரான விக்கிரம பாண்டியநல்லூரில் ஒன்பது மாவரை நிலம் இறையிலியாக வழங்கியதைக் கல்வெட்டு தெரிவிக்கின்றது (தரவு: மதுரை மாவட்ட கல்வெட்டு தொகுதி 1, பக்கம்: 299).*

*f. முதலாம் சடையவர்ம சுந்தரபாண்டியன் யாண்டு 19 அளவுகோல்.*

*காலம்: கிபி 1270*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: குளப்பாக்கம் அகத்தீஸ்வரர் கோயில் கிழக்கு அதிட்டானம்.*

*செய்தி: பதினொன்றே முக்கால் அடி நீள அளவுகோல் கோட்டுக்குறியாக வரையப்பட்டு அளவின் இருபுறமும் இரு மீன் உருவங்கள் கோட்டுருவில் காட்டப்பட்டுள்ளன(தரவு: ஆவணம்: 18 பக்கம் 76).*

*g. பாண்டியர் அளவுகோல்.*

*காலம்: கிபி 13 பிற்காலப் பாண்டியர்.*

*இருப்பிடம்: திருக்கச்சூர் கோயிலின் இரண்டாவது சுற்று வளாகத்தின் வட மேற்குச் சுவரில் அமைந்துள்ளது. அதே கோயிலின் வடக்கு மண்டபச்சுவர் மற்றும் திருச்சுற்று மாளிகையின் கிழக்குச் சுவற்றில் காளை உருவத்துடன் கூடிய அளவுகோல் காணப்படுகிறது.*

*செய்தி: பிறை, நுகத்தடி, மீன் உருவங்கள் செதுக்கப்பட்டு நீண்ட அளவுகோல் ஒன்று வரையப்பட்டுள்ளது (தரவு: ஆவணம் 20, பக்கம்: 85).*

***15. பாறைக் கல்வெட்டு***

*காலம்: கிபி 13ஆம் நூற்றாண்டு*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: யானைமலை அருகே கொடிக்குளம்*

*கல்வெட்டு செய்தி: மாறவர்ம குலசேகர பாண்டிய மன்னர் காலத்தில் அழகிய மணவாளன் பெயரில் திருநந்தவனம் ஒன்று அமைத்த செய்தியைக் குறிக்கிறது.*

***16. தானியங்கள் கல்வெட்டு:***

*காலம்: கிபி 14ஆம் நூற்றாண்டு*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: திருவாதவூர் சிவன் கோயில்*

*கல்வெட்டு செய்தி: செங்கழுநீர் கொழுந்து, வாழை, மஞ்சள், இஞ்சி, தெங்கு, கமுகு, மா, பலா, ஆமணக்கு போன்றவை அப்பகுதியில் பயிரிட்டதாகக் கல்வெட்டு செய்தியானது தெரிவிக்கிறது.*



***17. இரத்த காணிக்கை கல்வெட்டு/ உதிரப்பட்டி/ வயிராவி கல்வெட்டு:***

*காலம்: கிபி 18ஆம் நூற்றாண்டு*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: திருப்பரங்குன்றம் முருகன் கோயில்.*

*கல்வெட்டு செய்தி: கிபி 1793 கர்னல் பேயர்டு காலத்தில் ஐரோப்பியர்கள் திருப்பரங்குன்றம் கோயிலுக்குள் நுழைந்து சேதம் விளைவித்ததன் காரணமாக அதனை எதிர்த்து அதிகாரிகளும் பூசாரிகளும் கிளர்ந்தெழுந்தனர். அதனைப் புனிதப் படுத்துவதற்காக வயிராவி முத்து கருப்பன் என்பவருடைய மகன் குட்டியை கோபுரத்தின் மீது ஏறி கீழே விழச் செய்து இரத்த காணிக்கை கொடுத்துள்ளனர். இந்த இரத்த காணிக்கைக்காக அவர் குடும்பத்தாருக்கு நில தானமும், அரிசி சோறும் திருவிழாக்களில் வெற்றிலை மரியாதை செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதை இக்கல்வெட்டு செய்தியானது தெரிவிக்கிறது.*

*இதேபோன்று அண்டா பரணர் என்பவரும் இரத்த காணிக்கை கொடுத்துள்ளார். காரணம் தெரியவில்லை.*

**18. எல்லைக் கல் கல்வெட்டு/ சூலக்கல்**

*காலம்: பொ.ஆ.17ஆம் நூற்றாண்டு*

*இடம்: மதுரை தானப்ப முதலி தெரு, பூக்கார சந்து சந்திக்கும் இடத்தின் ஓரத்தில் கிழக்கு பார்த்தவாறு இரண்டரை அடி உயரமும், ஒன்றரை அடி நீளமும், அரை அடி அகலமும் கொண்ட சிவன் கோயில் நிலங்களின் எல்லைகளைக் குறிக்கும் முத்தலை சூலக்கல் ஒன்று உள்ளது.*

*கல்வெட்டு செய்தி: இக் கல்வெட்டின் முன்புறம் முத்தலை சூலம் உருவமும் இதன் பின்புறம் 9 வரிகளும், பக்கவாட்டில் 20 வரிகளும் கொண்ட தமிழ் எழுத்துக்களுடன் கூடிய கல்வெட்டு உள்ளது. தானம் கொடுக்கப்பட்ட நிலத்தின் விவரங்களைப் பற்றிய செய்திகளைக் கொண்ட கல்வெட்டு இது அவ்வாறு தானம் கொடுக்கப்பட்ட நிலத்தினை தவறாகப் பயன்படுத்துபவர்கள் காராம் பசுவைக் கொன்ற பாவத்திற்கு ஆளாவார்கள் என்று குறிப்பிட்டுள்ளது.*

**19. விஷமுறிவு கல்வெட்டு:**

*எழுத்து: தமிழ்*

*இடம்: மதுரை அலங்காநல்லூர் அருகே பெரிய ஊர் சேரி என்னும் கிராமத்தில் ஏழு அடி உயரம் அரை அடி அகலம் இரண்டு அடி நீளம் கொண்ட செவ்வக கல்லில் 22 வரிகள் கொண்ட எழுத்தும் அதற்குக் கீழே கருடாழ்வார் சிறபமும் அதற்குக் கீழே கல்வெட்டும் உள்ளது.*

*கல்வெட்டு செய்தி: இதனை நாட்டியவர் எரசக்கநாயக்கனூர் லட்சுமிபுரம் பழனியாண்டியா பிள்ளை மகன் மவுன குரு சீடன் சுப்பிரமணிய தேசிகர் என்பதும் இதற்குப் பொருள் உதவி செய்தவர் ஊர் சேரி முத்து காமாட்சி பிள்ளை என்றும் விஷம் தீண்டியவர்கள் இங்கு வந்து கம்பத்தை சுற்றி வந்து 3 முட்டு முட்ட விஷம் இறங்கும் என்றும் விஷக்கடி வாங்கியவர்கள் வர முடியாத பட்சத்தில் அதைப் பார்த்தவர் வந்து கம்பத்தில் முட்டி விட்டு வேட்டியை நனைத்துப் பிழிந்து போட்டுக் கொண்டுபோக வேட்டி காயக்காய விஷம் இறங்கும் என்று உள்ளது. அதற்குக் கீழே கருடாழ்வார் சிறபமானது நின்ற உருவத்துடன் கிரீட மகுடம் அணிந்து, இடது கையானது ஊரு ஹஸ்தத்துடன், படமெடுத்து நிற்கும் பாம்பினை பிடித்தவாறும், சங்கு சக்கரத்தோடு கூடிய விரித்த இறக்கையோடு வலதுகையை தாடனஹஸ்த்தில் வதம் செய்யும் விதத்தைக் குறியீடாகக் கொண்டும், கைகளில் கேயூரம் காப்பு அணிந்து, அரை ஆடை உடுத்தி கழுத்தில் நாகத்தினை ஆபரணமாக அணிந்தும்*

*கூரிய மூக்கும் சிறு பீடத்தின் மீது பிரத்தியாலீடாசத்தில் இருக்கும் விதமாகவும் தலையின் பக்கவாட்டில் சூரிய சந்திரனுடன் செதுக்கப்பட்டுள்ளது. அதற்குக் கீழாக ஓம் நமச்சிவாய, ஓம் சரவணபவ ஆகிய எழுத்துக்கள் தலைகீழாகச் சிறு சிறு கட்டத்துக்குள் பொறித்து வைத்துள்ளனர். கல்லின் பக்கவாட்டிலும் திருமலைப் பிள்ளை மகன் சந்தனம் கையலடித்த தம்பம் எனும் தமிழ் கல்வெட்டு எழுத்துக்கள் புதிதாகக் கண்டறியப்பட்டுள்ளது.*



***20. நூலகம் கல்வெட்டு:***

*காலம்: கிபி 1942*

*இருப்பிடம்: மதுரை புது மண்டபம்*

*கல்வெட்டு செய்தி: புதுமண்டபத்தின் மையப் பகுதியில் அருங்காட்சியகத்துடன் கூடிய நூலகம் ஒன்றினை அப்போதைய சென்னை மாகாண ஆளுநர் திறந்து வைத்த செய்தியைக் கல்வெட்டு தெரிவிக்கிறது.*

***21.ஊர்ப் பெயர் கல்வெட்டு:***

*காலம்:கிபி 1940*

*இருப்பிடம்: மதுரை யானைமலை ஒத்தக்கடை அருகே இராஜகம்பீரம் கிராமத்தின் நுழைவு சாலை மீது*

*கல்வெட்டு செய்தி:*

*உ*<br>
*இராஜகெம்பீரம் பஞ்சாயத்து போர்டு*<br>
*1940*

*கிபி 1940இல் மதுரை யானைமலை அருகே இராஜகெம்பீரம் என அழைக்கப்பட்ட ஊரானது இப்பொழுது இராஜகம்பீரம் என்ற பெயரில் மாற்றப்பட்டு அழைக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.*

***22. வானாதி ராயர் கல்வெட்டு***

*காலம்: 15 ஆம் நூற்றாண்டு*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: மதுரை காமராஜர் பல்கலைக்கழகம் எதிரே உள்ள வடபழஞ்சி கிராமத்தின் பாண்டி விநாயகர் கோயில் வாசலில் இக்கல்வெட்டு நிறுத்தப்பட்டுள்ளது.*

*கல்வெட்டு செய்தி: மகாபலி வானாதிராயர் காலத்தில் கிபி 15 ஆம் நூற்றாண்டில் வடபழஞ்சி கிராமம் சர்வ மானியமாகக் கொடுக்கப்பட்டது.*

***23. சுங்கச்சாவடி கல்வெட்டு/ குன்னுவராயன் கோட்டை:***

*காலம்: கிபி 13ஆம் நூற்றாண்டு*

*எழுத்து: தமிழ்*

*இருப்பிடம்: முத்தீஸ்வரர் கோயில் அதிஷ்டான பகுதி*

*கல்வெட்டு செய்தி: மதுராதைய ஈஸ்வரம், கண்ணுடைய விண்ணகர் என சிவன், திருமால் கோயில்களுக்கு பதினெண் விசயம், நான்கு திசை தேசி விளங்கு தேசி என்ற வணிகர்கள் ஒரு பொதிக்கு இவ்வளவு காசு என்று கொடுத்துள்ளனர். அதாவது கிழக்கு நோக்கிப் போகும் வணிக பொருள்களுக்கு (கேரளாவிலிருந்து) இதனைத் தாண்டி செல்லும்போது வரி அதாவது சுங்கம் வசூலிப்பது போல இவ்வூர் கோயில்களுக்குக் கொடை கொடுத்துள்ளனர்.*

***தரவுகள் :***

*1. மதுரை மாவட்ட தொல்லியல் கையேடு*

*2. பிராமி எழுத்துக்களும் தொல்காப்பியமும் ஓர் மீள் பார்வை- ப .பாண்டியராஜா*

*3. மதுரை மாவட்ட கல்வெட்டுகள் தொகுதி 1, 2*

*4. அழகர் கோயில் கல்வெட்டுகள்*

*5. தென்னிந்திய கல்வெட்டுகள் தொகுதி 14*

*6. Ephigraphica indica vol 38 ப:27-32,7.Annual report of Indian Ephigraphy 1939-1944,ப.286*

*7. தமிழ் பிராமி கல்வெட்டுகள், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை 2006*

# தமிழ்ச் சித்தரியலும் கிறிஸ்தியமும் - 4

**பேரா. முனைவர் மோ. மைக்கேல் பாரடே**
*மேனாள் தமிழ்த்துறைத்தலைவர்,*
*சென்னைக் கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்*



*தமிழ்ச் சித்தர்களின் இறைக் கோட்பாடுகளையும் விவிலியத் திருமறையின் கடவுள் கொள்கைகளையும் ஒப்பிட்டு ஆயும் இந்தக் கட்டுரைத் தொடரின் நான்காவது பகுதியாக இக்கட்டுரை அமைகிறது. சென்றமுறை, இரு பேரிலக்கியங்களும் பேசும் குருவணக்கத்தைப் பற்றிய சில செய்திகள் விவரிக்கப்பட்டன. குறிப்பாக, பெரும்பாலும் குருமார்க்கமாக அமைந்த சித்தர் இலக்கியங்களில் இறைவனே குருவாக அமைவதும், குரு, இறைவனைக் காட்டுபவராக அமைவதும் பற்றிய சான்றுகள் தரப்பட்டன. குரு, மக்களை இறைவனிடம் நடத்த வேண்டிய பொறுப்பில் பிறழும்போதும் வேறு உள்நோக்கங்கள் உடையவராகச் செயல்படும்போதும் பொய்க்குருவாகிறார். எனவே, சித்தர்கள் மெய்க்குரு யார்? பொய்க்குரு யார்? எனத் தெளிவுபடுத்துகின்றனர். இவருள் பொய்க்குருக்களை அவர்கள் இனம் காட்டுவதும் சாடுவதும் கடந்த இதழில் போகர், பாம்பாட்டியார், அகத்தியர் போன்ற சித்தர்களின் பாடல்களிலிருந்து அகச்சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன. அவ்வாறே விவிலியத்திலும் மூவொரு கடவுளரும் 'போதிக்கும் குருக்களாக'' விவரிக்கப்படுவதும் குறிப்பாக, இயேசுவே 'பூரண சற்குரு''வாகக் காட்டப்படுவதும் அதே நேரம் மனித குருக்கள் அல்லது போதகர்கள், மக்களைக் கடவுளிடம் நடத்த வேண்டியவர்களாக உள்ளனர் என்பதும் ஆதார வசனங்களுடன் காட்டப்பட்டன.*

*அதேநேரம், இந்நெறியிலிருந்து பிறழ்ந்து, தீய நோக்கங்களுடன் செயல்படும் பொய்க்குருக்களை இயேசுபிரானும் பிற முக்கிய விவிலிய எழுத்தாளர்களும் கடுமையாகச் சாடுவதும் சான்றுகளுடன் விளக்கப்பட்டன. இனி, இக்கட்டுரையில் கடவுளே மெய்க்குருவாக விளங்கும் தன்மைகளும் மனித குருக்களுள் மெய்க்குருக்களாக அமைவோரின் செயல்பாடுகளும், சித்தர்களின் பாடல்களிலிருந்தும் அவற்றுக்கு இணையான விவிலிய விவரிப்புகளிலிருந்தும் எடுத்துக்காட்டப்படும்.*

*i) இயேசு பெருமானின் வாழ்வும், வாக்கும், அகத்திய சித்தரின் 'குரு வர்ணனைக்கு'' பொருந்துமாறு*

*மெய்க் குருக்களைப் பற்றிய இக்கட்டுரைக்குத் தொடக்கமாக, பலராலும் குறிப்பாக கிறித்தவ ஆய்வாளர்களாலும் ஆர்வலர்களாலும் பெரிதும் சுட்டப்படும் ஒரு பாடலைக் குறிப்பிடலாம். "அகத்தியர் ஞானம் 30" என்ற நூலில் இடம் பெறும் இப்பாடலை, "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்ற ஆய்வு நூலை அளித்த பேராயர் இராபர்ட் கால்டுவெல், இயேசு கிறிஸ்துவைப் பற்றிய படப்பிடிப்பாக ஏற்று, எப்போதும் தம் படிப்பு மேசையின்முன் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதி வைத்திருப்பாராம். அப்பாடல்:*

*‘வணங்குவாய் செகசோதி ஒருவனாகி*

*மாநிலத்தை யொருநொடியில் வகுத்தே மண்ணில்*

*குணமான மனிதரையும் படைத்த பின்பு*

*குவலயத்திற் தானுதித்துக் குருவாய் வந்து*

*கனமான சமுசாரம் ஒன்றில்லாமல்*

*சந்நியாசி போலிருந்து தவத்தைக் காட்டி*

*அன்பான சித்தர்களை யிருத்திப்போட்டு*

*அகண்டதலம் சென்றவரை யண்டு வாயே!"*

*இப்பாடலை மேம்போக்காகப் படிப்போரும் கூட, இது எவருடைய பெயரையும் குறிப்பிடாவிட்டாலும், இயேசு பெருமானின் மானிட வாழ்வின் அனைத்துக் கூறுகளையும் அதிசயப் பிறப்பு, போதனை வாழ்வு, தியாக மரணம், சீடர்களை ஏற்படுத்தியமை, விண்ணேற்பு என அப்படியே சுட்டுவதைக் கவனிக்க முடியும். இப்பாடலுக்கு முழுதும் பொருத்தமான வேறொருவரைத் தமிழ்ச் சமயப் பரப்பினில் நாம் காணவியலாது என்பதும் பலரும் ஒப்ப முடிந்த முடிவே.*



*இதே அகத்திய சித்தர், மேற்குறித்த "அகத்தியர் ஞானம் 30" என்ற இதே நூலில், கடவுளைச் "சரியாக ஆத்துமத்தின் கசட்டைத் தீர்க்கும் சற்குரு" என்றும், "அனாதியான சச்சிதானந்தன் ஆகிய சற்குரு" என்றும் பேசுகிறார். இயேசு "மனிதர்களின் பாவங்களை நீக்கி, அவர்களை இரட்சிக்கவே இவ்வுலகில்*

*வந்ததாகவும்''; (மத்தேயு 1:21) அவர் "அனாதியாக விளங்கும் மெய்க்கடவுளின் மானிட வடிவமே'' (கொலோசெயர் 1:15-17) என்றும் விவிலியம் பேசுவதை இதனுடன் ஒப்பிட்டு விளக்கலாம். மேலும், அகத்தியர் இவ்வாறு மெய்க்குரு பற்றிக் குறிப்பிடுவதாக, சில நூல்கள் கூறுகின்றன.*

*"சோதியென்னும் குருநாதன் தன்னையற்றித்*

*தொல்புவியிற் குருக்களென்று சொல்லொண்ணாதே''*

*"மண்டலத்திற் சற்குருவை வணங்கி நின்றால்*

*மாறாத பெருவாழ்வு வாழலாமே''*

*இயேசு பெருமானும், "நானே உலகின் ஒளி'' என்றும் (யோவான் 9:5), "என்னையன்றி, எவரையும் குருக்களென அழைக்க வேண்டாம்'' (மத்தேயு 23:8-10) எனவும், "மனுமகனிடத்தில் நம்பிக்கையாயிருக்கிறவன் நிலை வாழ்வை உடையவனாய் இருக்கிறான்'' (யோவான் 3:36) எனவும் கூறியுள்ள வாசகங்கள் மேற்சுட்டிய பாடல்களின் நிறைவேற்றமாக விளங்குவதை நாம் உணரலாகும்.*

*ii) பாம்பாட்டிச் சித்தர் பேசும் குரு வணக்கச் செய்திகளும் அவை விவிலியக் கோட்பாடுகளுக்குப் பொருந்துமாறும்*

*சித்தர்களிலேயே "குரு வணக்கத்தைப்'' பற்றி மிக விரிவாகப் பாடியவராக நாம் பாம்பாட்டிச் சித்தரைக் குறிப்பிடலாம். அவர் "குரு வணக்கம்'' எனத் தலைப்பிட்டு குருவின் மாண்புகளைப் பற்றி 10 பாடல்களையும், "சித்தர் வல்லபம்'' எனத் தலைப்பிட்டு அதாவது அம்மெய்க்குருவின் சீடர்களின் ஆற்றலைப் பற்றி 15 பாடல்களும் பாடியுள்ளார். இவையன்றி, வேறு பல பாடல்களிலும் மெய்க்குருவான இறைவனின் மாண்புகளையும் அவரை அடிதொழ வேண்டிய முறைமைகளையும் பற்றிப் பேசியுள்ளார். இவற்றுள் "குருவின் மாண்பு'' பற்றி அவர் பேசும் பல பாடல்கள், கிறிஸ்து இயேசு தம்மைப் பற்றி தாமேயும், அவரைப் பற்றி பிறரும் கூறியுள்ள பல செய்திகளுக்கு அப்படியே பொருந்துவனவாக அமைவதை, உற்று நோக்கினால் உணரலாம். இவை, பொதுவான "இறை வர்ணனைகள்'' என்று*



*பிறரால் சொல்லப்படலாம். எனினும், இவ்விவரிப்புகள், வேறு எந்த தெய்வ அவதாரத்துக்கும் முற்றாகப் பொருந்துவதாகக் கூறவியலாத நிலை உள்ளது. சில சான்று பாடல்கள் கீழே காண்போம்.*

*அ) "பொய்ம்மதங்கள் போதனை செய் பொய்க் குருக்களைப்*

*புத்தி சொல்லி நன்னெறியிற் போகவிடுக்கும்*

*மெய்ம்மதந்தான் இன்னதென்று மேவ விளம்பும்*

*மெய்க்குருவின் பதம் போற்றி ஆடு பாம்பே"*

*"வேதப்பொருள் இன்னதென்றும் வேதங் கடந்த*

*மெய்ப்பொருளைக் கண்டுமனம் மேவி விரும்பிப்*

*போதப்பொருள் இன்னதென்றும் போதனை செய்யும்*

*பூரண சற்குருதாள் கண்டு ஆடு பாம்பே!"*

*விவிலிய மறையின் புதிய ஏற்பாட்டின் முதல் நான்கு நூல்களான நற்செய்தி நூல்களைப் படித்தால், இயேசுபிரான் தம் மானிட வாழ்வு முழுவதும் மேற்குறித்தவாறே, மெய்யான கடவுளாம் தம் தந்தையை இனம் காட்டுவதையும், பொய்க்குருக்களை அடையாளம் காட்டுவதையும், தமக்கு முன்னரே எழுதப்பட்ட மறைநூல் வாசகங்களின் உண்மைப் பொருளையும் உட்கருத்துகளையும் விளக்கி உரைப்பதையுமே தம் போதனைத் திருப்பணியாக ஆற்றி வந்தார் எனத் தெள்ளிதின் உணரலாம். விரிவஞ்சி, சான்றுகள் தவிர்க்கப்படுகின்றன.*

*ஆ) "அங்கையிற் கண்ணாடிபோல ஆதிவத்துவை*

*அறிவிக்கும் எங்கள் உயிரான குருவை"*

*இயேசுபிரானும் தம்மைக் கண்டோர், "விண்ணகத் தந்தையாம் கடவுளைக் கண்டோர்" (யோவான் 14:7-9) எனக்கூறியும் "தாமே விண்ணகத்திலுள்ள இறைவனைத் தெள்ளத் தெளிவாக மானுடர்க்கு உணர்த்தியவர்" (யோவான் 1:18) என்றும் தெளிவுபட மொழிந்துள்ளார்.*

*இ) 'கற்பகாலம் கடந்தாதி கர்த்தாவோடும்*

*கடமழியாது வாழும் காரணக்குரு"*

*இந்த வாசகமும், தம் வானகத் தந்தையோடு உலகத் தொடக்க முதல் இருப்பவராகவும், தம் உடலாலும் அழிவைக் காணாது வாழ்பவராகவும்*

இயேசு பிரான் திகழ்வதை விவரிக்கும் விவிலிய வாசகங்களை (எபிரேயர் 1:2, 3, 8, யோவான் 8:29, 58) நினைவூட்டுவதாகவே உள்ளது.

ஈ) "கூடுவிட்டுக் கூடுபாயும் கொள்கை உடைய

குருவின் வல்லபம் எவர் கூறவல்லவர்?

வீடு பெறும் வகையை மேன்மேலும் காட்டும்

மெய்க்குருவைப் பணிந்து நின்று ஆடு பாம்பே"

இப்பாடலும் மானிட உடலெடுத்து முப்பத்து மூன்றாண்டுகளுக்கு மேலாக, இவ்வுலகில் வாழ்ந்து பின்னர் பல்லோர் காண தம் பரம தந்தையிடம் விண்ணேறிச் சென்ற இயேசு பெருமானின் வாழ்வு நிகழ்வையும், அவர் இருவித உடல்களை ஏற்பது பற்றி, அவர் உயிருற்றெழுந்தபின் காட்சி அளித்த மகதலேனா மரியாள் என்ற பெண்ணிடம் 'தம்மைத் தொட வேண்டாம்" எனத் தடுத்துப் பேசுகிற செய்தியையும் (யோவான் 20:17, அப்போஸ்தலர் 1:9) நமக்கு நினைவூட்டுவனவாக உள்ளது. சித்தர்கள் மனித உடலில் கூடுவிட்டுக் கூடு பாய்வது பற்றிய பல செய்திகள் பலருடைய தனி அனுபவ - நம்பிக்கைச் செய்திகளாகப் பேசப்பட்டாலும், விவிலியத்திருமறையில் தெளிவாகக் குறிப்பிடப்படுவது போன்று வேறெந்த நூலிலும் காணப்படுவதாகத் தெரியவில்லை.



iii) கடுவெளியார் பேசும் மெய்க்குருவும் இயேசு பிரானின் திருமொழிகளும்

அவ்வாறே, கடுவெளிச் சித்தரும் மெய்க்குருவைப் பற்றியும் அவர்தம் போதனைகளைக் கடைபிடிக்க வேண்டுவது பற்றியும் வலியுறுத்துகிறார்.

"மெய்க்குரு சொற்கடவாதே; நன்மை

மென்மேலுஞ் செய்கை மிக வடக்காதே"

என்கிறார். தம்மையே "மெய்க்குரு" எனப் பிரகடனப்படுத்திய இயேசு பிரானும், "நீங்கள் என் கட்டளைகளைக் கைக்கொண்டிருந்தால், என்னுடைய அன்பிலே நிலைத்திருப்பீர்கள்" (யோவான் 15-10) என்றும், "நீங்கள் என்னிலும்

*என் வார்த்தைகள் உங்களிலும் நிலைத்திருக்க வேண்டும்" (யோவான் 10:7) என்றும் மொழிந்துள்ளதை இங்கு ஒப்பிட்டுப் பார்க்கலாம்.*

*iv) சிவவாக்கியர் பாடல்கள் பேசும் மெய்க்குருவின் மேன்மைகளும் அவை இயேசு கிறிஸ்துவுக்குப் பொருந்துமாறும்*



*சித்தர்களுள் தலையாயவராகிய சிவவாக்கியரும் மெய்க்குருவின் மேன்மைகள் பற்றியும் தனித்தன்மைகள் பற்றியும் பல பாடல்களில் பேசுகிறார். குறிப்பாக, கீழ்வரும் இரு பாடல்கள் விவரிக்கும் குருவாகிய இறைவனின் பண்புகள், இயேசு கிறிஸ்துவின் மானிட வாழ்வுக்கு மிகவும் பொருந்தக் கூடியனவாக உள்ளதை, உற்று ஆய்வார் உணரவியலும். அவ்விரு பாடல்களாவன:*

*அ) விண்ணிலுள்ள தேவர்கள் அறியொணாத மெய்ப்பொருள்*

*கண்ணி லாணியாகவே கலந்துநின்ற தெம்பிரான்*

*மண்ணிலாம் பிறப்பறுத்து மலரடிகள் வைத்தபின்*

*அண்ண லாரும் எம்முளே அமர்ந்து வாழ்வ துண்மையே.*

*ஆ) நீரிலே முளைத்தெழுந்த தாமரையின் ஓரிலை*

*நீரினோடு கூடி நின்றும் நீரிலாத வாறுபோல்*

*பாரிலே முளைத்தெழுந்த பண்டிதப் பராபரம்*

*பாரினோடு கூடிநின்ற பண்புகண் டிருப்பரே.*

*முதற்பாடல், மேலுலகத்திலுள்ளதாகச் சொல்லப்படும் தேவர்கள் அல்லது தேவதூதர்கள்கூட, முற்றும் அறிந்துணர முடியாத மெய்க்கடவுள், மனிதராகிய நம்முடன் கலந்து வாழ்வதற்காக, இம்மண்ணுலகிலே தம் மலரடிகளை வைத்தார். அதாவது மானிட வாழ்வு வாழ்ந்தார். அதனால் எம் உள்ளத்தில் அவர் குடிகொண்டு இன்றும் வாழ்கின்றார் என இயேசுவின் மானிடப் பிறப்பையும், வாழ்வையும் அதன் விளைவுகளையும் வர்ணிப்பதுபோல் அமைந்துள்ளது.*

*இரண்டாவது பாடல் கூறும் செய்தி, இயேசுபிரான், "உலகிலிருக்கும் பொழுதே நான் இதைச் சொல்லுகின்றேன்... நான் உலகைச் சார்ந்தவன்*

*அல்லன்" (யோவான் 17:16) எனக் கூறிய வாக்குடன் இணைத்தெண்ணத்தக்கது. நீரிலிருந்தும் நீர்தன்மேல் ஒட்ட ஒட்டாத தாமரையைப் போல, பாவ மானிடனாகப் பிறந்தும், பாவமறியாத - பாவம் புரியாத மானிடனாக இயேசு வாழ்ந்து காட்டினார் என விவிலியம்; விளக்கும் பகுதிகளையும் (எபிரெயர் 4:15, 2 கொரிந்தியர் 5:21) இங்கு ஒப்புநோக்கிப் பார்க்கலாம்.*

இ) குதம்பையார் பேசும் மெய்க்குருவும் இயேசுவின் மொழிகளும்

இவ்வரிசையில் குதம்பைச் சித்தரின் சில பாடல்களையும் கருதலாம். அவர் நேரடியாக, அதிகமாக "மெய்க்குரு" எனக் குறிப்பிடவில்லை. ஆயினும், குருவாக வந்த கடவுளை "மெய்த்தேவன்" என்றும், "சீரான தேவன்" என்றும் "எல் லார்க்கும் மேலான ஏகன்" என்றும் பாடியுள்ளார்.

'மெய்த்தேவன் ஒன்றென்று வேண்டாத பன்மதம்

பொய்த்தேவைப் போற்றுமடி - குதம்பாய்

பொய்த்தேவைப் போற்றுமடி"

என்பது அப்பாடல்களுள் ஒன்று.

இயேசு பெருமானும் மெய்க்கடவுள் பற்றியும், "ஒரே கடவுள்" பற்றியுமே போதித்து வந்தார். குதம்பையார் "எல்லார்க்கும் மேலான ஏகன்" அதாவது "எல்லாரிலும் மேம்பட்ட ஒரே கடவுள்" எனக் குறிப்பிடுவதைக் கருத வேண்டும். "இயேசு பிரானும்" ஒன்றான மெய்த் தேவனாகிய உம்மையும் நீர் அனுப்பினவராகிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நிலை வாழ்வு" (யோவான் 17:3) என மொழிந்தருளினார்.



இவ்வாறாக, மெய்க்குருவின் மேன்மைகளைப் பேசுவதிலும், இறைவனே மெய்க்குரு எனச் சுட்டி விளக்குவதிலும் விவிலியத் திருமறையும், தமிழ்ச்சித்தர் இலக்கியமும் ஒன்றுபட்டே நிற்கின்றன என உய்த்துணரலாம்.

*(தொடரும்)*

# ஆயுர்வேத மருத்துவ வரலாறு

***மரு. புட்பராஜ்***

In Tamil GAN K. B. Pushparaj
In Malayalam Di C.A. Ravindran

*இது மலையாளத்தின் தமிழாக்கம்*

***(இந்த உரை கேரள ஆயுர்வேத மருத்துவர் C.A. ரவீந்திரன் என்பவருடைய நோயும் பரிகாரங்களும் ஆயுர்வேதத்தில் என்ற மலையாள மருத்துவ நூலில் பதிவு செய்யப்பட்டுள்ள தகவல் இவைகள். இந்நூலை லாலு புத்தகம், கோட்டயம் மலையாள மொழியில் வெளியிட்டதின், ஆயுர்வேத வரலாற்றுப் பகுதி மட்டும் தமிழாக்கம் ஆய்வாளர்கள் கவனத்திற்கு மருத்துவ செய்யப்பட்டுள்ளது. இதை தமிழ் சமர்ப்பிக்கிறோம்.)***

*வைத்திய நூல்களை இந்து வைத்தியமென்றும், ஆரிய ஆயுர்வேத வைத்தியமென்றும் சிலர் பெயரிட்டு கூப்பிடவும் எழுதவும் செய்வது சர்வ சாதாரணமாக உள்ளது. ஆரியர்கள் இந்தியாவில் ஊடுருவி ஆக்கரமிப்பு நடத்துவதற்கு முன்பு உண்டாயிருந்த சிந்து சமவெளி (மொகஞ்சதாரோ கரப்பா) கலாச்சாரத்துடன் சம்மந்தப்பட்ட அடையாளத்தை, அயல்நாட்டவர் சிந்துவினை "இந்து" என்றும் அதனை தொடர்ந்து கிரேக்கத்தார் "இந்தியா" என்றும் அழைத்தார்கள். அப்படி சிந்து சமவெளி கலாச்சார காலத்தில் உதயம் செய்து, விரிவடைந்த ஒரு நூல் என்ற நிலையில் இந்து வைத்திய சாஸ்திரம் என்று சொல்வதில் ஒரு எல்லை வரை தவறு இல்லை என்று ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் சாதியும், மதமும் தோற்றுவிக்கப்படாத ஒரு கால கட்டத்திற்கு பிறகு சாதிப்பிரிவினையும், அதன் நோக்கங்களும் வலுவாக திணிக்கப்பட்டதாகும். ஆயுர்வேதத்தை இந்து வைத்தியம் என்று சொல்வதில் பிராசீன இந்திய வைத்திய இந்த பெயரில் அழைப்பது தான் சாஸ்திரம் என்று பொருள் கொண்டுள்ளனர். தேவையில்லாததும் தவறானவையும் ஆகும். இந்திய வரலாற்றை உண்மையாகவும் நூலாதாரங்களிலிருந்து கிடைத்த அறிவுகளின் விவரங்களை பரிசோதனை செய்தால் ஆயுர்வேத நூல் வரலாற்றில் சேர்க்கப்பட்டுள்ள பல கட்டு கதைகள் சம்மந்தமில்லாமல் மாறுவது நமக்கு காண்பதற்கு முடியும். ரிக் வேதத்திலும் அதர்வன வேதத்திலும் வைத்திய விஞ்ஞானத்தை பற்றி உள்ள விளக்கமான ஆதாரங்கள் பற்றி உள்ள விளக்கமான ஆதாரங்கள் உள்ளது இந்த இரண்டு நூல்களும் கிபி இரண்டாம் நூற்றாண்டை சேர்ந்ததாகும்.*

கேரளா மொழி கல்வி நிறுவனம் மலையாளத்தில் மொழி பெயர்த்து பரிபாஷைப் படுத்தின "சாஸ்திரம் இந்தியாவில்" என்ற நூலின் பாகத்தை படித்தால் "சிந்துசமவெளி கலாச்சாரங்கள் ஆயுர்வேதத்துக்கு முந்தைய வேறுவிதமான மருத்துவ விஞ்ஞானத்தை கறுப்பு நிறத் பயன்படுத்தயிருந்தார்கள் என்பதற்கு அதிகம் ஆதாரங்கள் உண்டு.



மருந்து தோலுடைய நம் நாட்டு அறிவியலிலிருந்தும், மக்களின் செய்முறைகளிலிருந்தும் ஆரியர்கள் மருத்துவ அறிவியலை வளர்த்துக் கொண்டு வந்தார்கள்." உண்மை இப்படி இருப்பதை தவிர்த்து வெளியிடப்படும் அதர்வண வேதத்தைப் பற்றியும் அதன் உப வேதமென்று சொல்லப்படுகின்ற ஆயுர்வேதத்தை வரக்சி பற்றியும் இனியும் மிகவும் கூடுதல் நாம் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. பேச்சிலும், இலக்கியத்திலும் முழுமையான ஒரு மொழி ஆரியவர்த்தத்திற்கு பாதர் முன்னர் இந்தியாவில் நடைமுறையிலிருந்தது என்று கால்ட்வெல் கண்டறிந்தார். சிந்துசமவெளி நாகரீகம் இந்தியாவில் பாபிலோனியா, சமாரிய கலாச்சாரங்களை விடவும் வளர்ச்சியடைந்திருந்தது என்றும், இவர்களுக்கு எழுதுவதற்கும் அது பயனுள்ளதாக பயன்படுத்துவதற்கும் முடிந்திருந்தது என்றும் அவர்களுடைய அனேகம் பதிவுகள் தெரிவிக்கிறது என்று மாக்டொனால் கோர்டன் சைல்டு என்ற ஆய்வாளர்கள் தெரிவித்தார். விலேட்டர் முனைவர், சொன்னார்கள். NOT TO MA என்றும் ஸ்ளேற்றர் தனது நூலில் சூரியனுடையவும் சந்திரனுடையவும் செயல்பாடுகளையும் தினங்கள், வருடங்கள், மாதங்கள் நட்சத்திரங்கள் போன்றவைகளையும் அக்காலத்தில் இந்தியர்கள் ஆய்வு செய்து சரியாகக் கணக்கிட்டிருந்தார்கள் அடையாளப்படுத்தியிருக்கிறார்.

ஆயுர்வேதத்தில் ரிக்வேதம் பகுதி இதற்குள்ள தெளிவான ஆதாரமாகும். பாரத வரலாறு என்ற நூலில் பேராசிரியர் எ.ஜி. மேனோன் பிரம்ம எழுத்தும் பாஹ்ம லிபி இடத்தில் நடத்திய ஆய்வுக்கும் பிறகு அடையாள ஆதாரத்தோடு தெளிவாக்கப் பட்டுள்ளது. இதெல்லாம் வைத்து பார்க்கும்போது பிராகிநாதர்மொழியில் நின்றுதான் இருந்து சமற்கிரத மொழி உண்டானதென்ற சரித்திர உண்மையில் வலுசேர்ப்பதாக அமையும் (சமஸ்கிருத மொழி தோன்றுவதற்கு முன்னர் தமிழிலிருந்து பிராகிருத மொழியை உருவாக்கிய பின்னரே அதிலிருந்து சமற்கிருத மொழியை உருவாக்கினார். இது அடிப்படை வரலாற்று உண்மை.) நூலாதார அடிப்படையில் அறிவியல் வடிவம் கொண்ட ஒரு ஆரோக்கிய பரிபாலன பரிகாரமுறை சிகிட்சைமுறை சிந்துநதி கரையோரப்பகுதியில் இந்தியாவில் நடைமுறையில் உண்டாயிருந்து என்ற வரலாறுத் தெளிவுகள் ஆய்வாளர்களுக்கு கிடைத்திருக்கிறது. ஆயுர்வேத வரலாறு நூல்களில் பதிவு செய்யப்பட்ட தமிழர்களுடைய நகர கட்டமைப்பு மற்றும் ஓடைகளுடைய அமைப்புகள் எல்லாம் கண்டு வெளிநாட்டுக்காரர்களும் ஆச்சரியமடைந்தனர். செய்தது இந்த வரலாறு நகரங்களையும் பண்பாட்டையும் இல்லாமல் பண்ணினது ஆரியர்களென்று வரலாறு தெளிவாக கூறுகின்றது. இதைப்பற்றி முனைவர் எ. ஐயப்பன் இதை தனது "பாதர்பழமை" என்று நூலில் பதிவு செய்திருப்பது இப்படியாகும். அதாவது ஹரப்பா கலாச்சாரத்தை அழித்தது பண்பாடற்ற ஆரிய ஆயுதக் கோடரியாக இருந்தது.



இந்தியாவில் மட்டுமல்ல ஈராக்கில் அக்காட், வடக்கு பேர்சியா, காஸ்பியன் கடலோரம் ஆரிதம் முதலான பிரதேசங்களும் இவர்கள் கோடரி ஆயுதத்தை கொண்டு கீழடக்கினார்கள். கோடரி கொண்டு கேரளத்தை மீண்டெடுத்த பிரமாண ஆதிக்கத்தை தோற்றுவித்த பரசுராமரின் கதையின் பொருள் என்னவென்று இப்போது தெரியவந்தது. முனைவர் ஐயப்பன் தொடர்ந்து எழுதுகிறார். அனா வேதங்களில் ஆரியர்களல்லாத

*ஆனாரியர்களுடைய கோட்டைகள் இந்திரன் அழித்ததாக சொல்லப்படுகிறது. புரங்கள் (கோட்டைகள்) அழித்ததனால் தான் இந்த இராமாயணமும், மகாபாரதமும் எல்லாம் ஆரியர்கள், தமிழர்களை அடிமையாக்கி அவர்களின் கலாச்சாரத்தையும், பண்பாட்டு நகரங்களையும் அழிக்கும் வீர சாகச கதைகளாகும். இப்படி இந்தியாவுள் ஊடுருவி இங்குள்ள கலாச்சாரத்தையும் நகரங்களையும் ஆரியர்கள் அழித்தார்கள் என்றாலும், நட்புகளின் அடிப்படையில் நூல் அறிவியல் வளர்ச்சியையும், வாழ்க்கை அனுபவங்களையும் ஆரியர்களுக்கு சொந்தமாக்கி கொள்ள எந்த தயக்கமும் அவர்கள் காட்டவில்லை. பாரத வரலாறு என்ற நூலில் ஆர்.சி.ச்சுதார் சொல்வதை கவனிக்கவும். "ரிக்வேதங்களில் தங்கத்தின் 726 பயன்களைப் பற்றி/ சொல்லப் பட்டுள்ளது".*

*ஹாரப்பா காலத்தில் தங்கம் வெள்ளி பாத்திரங்கள் இருந்தது. அமிழ்த தயாரிப்பு மற்றும் உபயோகப்படுத்தும் முறை ஹரப்பா மொகஞ்சதாரோ காலத்திலிருந்து ஆரியர்கள் அபகரித்து தங்களுடையதாக்கி பின்பற்றி வந்தார்கள். அதர்வண வேத உள்ளடக்கமே நம்மவர்களிடமிருந்து அபகரித்தது எனத் தெள்ளத் தெளிவாக பாரத சரித்திரத்தில் தொடர்ந்து பதிவு செய்யப்பட்டுள்ளது. ரிக், சாம யஜூர் வேதங்களிலோ அதனுடைய உபவேதங்களிலோ காணாத விதத்திலுள்ள சிந்தனை முறையும், மத சம்பிரதாய முறையும் ஆயுர் வேதத்தில் வந்து சேருவதற்கான ஆரியர் அல்லாதவர்களான அனாரியர்களான- நம் நாட்டு மக்களின் கலாச்சார நூல்களை காரணம் இவ்வாறு ஏற்றுக்கொண்டதினால் கிடைத்தது ஆகும். இது ஆரியர்கள் தனக்குரிய நூல்கள் அடிப்படையில் மாற்றிக்கொண்டார்கள். நம் நாட்டுக்காரர்களை முடிந்த அளவு சந்தோஷப்படுத்துவது அதர்வண வேதத்தின் குறிக்கோள். என்றாலும் கூட்டம் நடத்துவதற்கான பொறுப்பு மற்றும் அதிகாரங்கள் அங்கேயும் பிராமணர்கள் அபகரித்து எடுத்து தங்கள் வசம் வைத்து கொண்டார்கள். தமிழ் மருத்துவ வல்லுநர்களுக்கு சமூகத்தில் உண்டாயிருந்த செல்வாக்கு கண்டு வேறு வழி இன்றி ஆரியர் அதர்வண வேதத்தை ஏற்றுக் கொண்டனர் தமிழர் வாழ்ந்த காலத்தில் எழுதி இயற்றியது தான் மந்திரவாதிகளால் கட்டமைக்கப்பட்ட அதர்வண வேதம். இந்நூலை உருவாக்கி மரபு சார்ந்த தமிழ் மருத்துவர்களை ஒரே கட்டமைப்புக்குள் கொண்டு வந்தனர். அதர்வண வேதத்தில் திறமையான மருத்துவர் ருத்ரனாகும், என்றும் பதிவு செய்யப் பட்டுள்ளது. புலித்தோலும், சாம்பலும், பாம்பையும் கொடுத்து சிவனை கூட தெய்வத்தினுடைய பட்டியலில் ஆரியர்கள் அமர்த்தினர். இதனால் சிவ பக்தனான தமிழ் மருத்துவர்களை சொந்தக்கட்டுப்பாட்டின் கீழே நிறுத்துவதற்கு ஆரியர்களுக்கு முடிந்தது.*

ஆரியர்களுக்கு ஆயுர்வேத மருத்துவ நூலின் மொழி பெயர்ப்பு உரிமை மட்டும் தான் உண்டு என்று வரலாறு மிகவும் தெளிவாக அடையாளப்படுத்தியிருக்கிறது. அதர்வண வேதம் கூட ஆரிய நூலல்ல, பிறகு அதன் உப வேதமான ஆயுர்வேதத்தின் காரியத்தில் என்ன சொல்வதற்கு உள்ளது. இந்தியாவில் ஆரியர்களின் பல காலகட்டங்களில் தமிழ் மருத்துவர்களை பல வழிகளில் மிகவும் இழிவுப்படுத்தியிருந்தார்கள் என்று ஆரிய நூல்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. ஆரிய தமிழ் இணைப்புக்கு பிறகும் தமிழ் மருத்துவர்களை தீண்டாமையினால் தூர மாற்றி நிறுத்தியிருந்தார்கள் என்று ஆரியக் கொள்கைகளை பரப்பிய ஆதார நூலான மனுதர்ம நூல் சொல்கிறது. மருத்துவம், மந்திரவாதம் இவைகள் உள்கொள்ளுகிற அதர்வண வேதத்தோடு வைதீக ஆரியர்களை தமிழ் மக்கள் வெறுப்புடன் அணுகியிருந்தனர். காலபோக்கில் மருத்துவ உபயோகங்களுடைய முன்னால் அதர்வண வேதத்தினுள்ள கருத்துக்களை மக்கள் அங்கீகரித்து வேதமாக ஏற்றுக்கொள்ள செய்யப்பட்டது. (மனுதர்ம நூல் கதவிதை-384.)

लोकायत

இந்தியாவில் பிரசித்தி பெற்ற தார்சனிக பண்டிதனான தேவிபிரசாத் சந்தோகத்னியூதயுடைய லோகாயத என்ற நூலில் பாரத நூல்களைப்பற்றி வரிவான பாடம் நடத்தியிருந்தார்கள். அந்த அறிஞர் தனது நூலில் எழுதியிருப்பதாவது இந்தியாவில் தொழில்கள் எல்லாம் அறிவியல் சம்மந்தப்பட்ட, ஆரியர்களல்லாத அனுபவமுள்ள அசுரரில் (ஆரியர் அல்லாதவர் -அனாரி யர்) இருந்தும் உண்டானது. இது தொடர்பாக பல வேள்விகள் செய்தும் எவ்விதப் பயனும் ஆரியர்களுக்குக் கிடைக்கவில்லை. இதில் ஆரியர்கள் பெரிய அறிவாளிகள் அல்லர்! அவர்கள் யாகங்கள், வேள்விகள் செய்தும் அவர்களோடு இணைந்து வாழ்பவர்களுக்கு எந்தப் பயனும் கிட்டவில்லை. தமிழ் மக்களைத் தவறான வழியில் நடத்தி சென்றவர்கள். வைத்திய நூல்களோடு ஆரியர்களுக்குள்ள மோசமான உதாரணங்களாகப் பல கதைகளை ஆரிய புராணம் தான் சொல்கிறது. அசுவனிகளுக்குத் தேவர்களுடைய சிகிட்சையினால் இளமை மீண்டும் கிடைத்த செவனியர் பதிலுபகாரமாக யாகம் கொடுப்பதற்குத் தயாராகும்போது ஆரியக் கடவுளான அபாய இந்திரனிற்கு கோபம் வந்தது. செவனியர்களுக்கு

வேள்விகள் கொடுப்பதால் வச்சிராயுதத்தை உயர்த்திப் போருக்குச்சென்ற இந்திரனை செவனியர்கள் வெட்கப்பட வைத்தார்கள். செவினியர்களுடைய சாபத்தால் கை தளர்ந்து போன இந்திரன் தன் கை சரியாவதற்கு செவினியர்களுடைய கால் பிடித்து கெஞ்ச வேண்டியது வந்தது. அதுபோல் இராமாணத்தில் காயமடைந்த லட்சுமணனுக்கு சிகிட்சை செய்தது இராவண குலத் தமிழ் மக்களாகும். இராவணர் மிக சிறந்த குழந்தை மருத்துவ நிபுணராகும். பாலர் சிகிட்சையில் அறியப்பட்ட மருத்துவ நூல்கள் எல்லாம் இராவணருடையதாக இருந்தது. அப்படி மாற்றி எழுதப்பட்ட ஆயுர்வேத நூல்களில் ஆரியர்கள் பலரும் சொந்தமாக எழுதிச் சேர்க்கவும் செய்திருக்கிறார்கள். அதிரி தேவவித்தி யாலங்க என்ற இதிகாச முக்கியத்துவம் வாய்ந்த நூலில் சரகசம்கீதயிலும் சுசுருத சங்கீதயிலும் அவருடைய காலகட்டத்திற்கு பிறகு பலரும் கூடுதலாக எழுதி சேர்த்திட்டுள்ளதாக தெரிய வருகிறது.

இந்தியாவில் பல காலகட்டங்களில் எழுதி உருவாக்கிய ஆயுர்வேத நூல்களை பரவச் செய்து, புத்தர்களின் காலகட்டங்களில் விளம்பரப்படுத்தினர். ஆயுர்வேதத்தினுடைய பொற்காலமென்று இந்த காலகட்டங்களை அழைப்பதில் எந்த தவறும் இல்லை. இந்தியாவில் முதலாவது ஆயுர்வேத வைத்தியசாளை கலாகாலாஸ்ரீ ஆனது தட்சசீலயில் நிறுவப்பட்டு உலகத்தினுடைய நான்கு திசைகளிலிருந்தும் ஆயுர்வேதம் படிக்க மாணவர்கள் தட்சசீலையில் வந்து ஆயர்வே வைத்திய முறையை/படித்து சொந்த நாடுகளுக்கு திரும்பி போனார்கள். பிரதானமாக பல ஆயுர்வேத நூல்களும் இந்த காலத்தில் எழுதி சேர்க்கப்பட்டது. உலகத்தில் அறிமுகமான நாகார்ஜுனனுடைய இரச நூல்கள் இக்காலத்தில் மருத்துவ வகுப்புக்களில் எடுத்து சொல்லவேண்டியதாகும். புத்தபிக்குகளுடைய ஆயுர்வேதம் படர்ந்து விரிந்தது.

பௌத்த காலகட்டத்திற்கு பிறகு சும்கராச வம்சனான புட்சமித்திரன் காலத்தோடு ஆயுர் வேதத்தின் அறிவு ஆரம்பித்தது. புத்த, இந்து மத சங்கத்தினுடைய மோசமான செயலால் அறுவை சிகிட்சை முறை பின்தள்ளப்பட்டது. புத்த இந்து மத பரிவர்த்தனை சங்கம், அறுவை சிகிட்சையின் போது இரத்தம் வெளியேறுவதால் அதை நிறுத்தியது.

மருத்துவர்களுக்கு நாட்டிலுள்ள செல்வாக்கு கண்டறிந்த வைதீக புரொகிதர்கள் வைத்தியம் படிப்பதற்குள்ள முயற்சியை ஆரம்பித்தனர். இதற்காக வெளியே இருந்த திறமையான மருத்துவ பண்டிதரை மிரட்டியும், தாக்கியும், பயமுறுத்தியும் இந்து மத அடிமைகளாக்கினர். இந்த மிரட்டலில் பயப்பட்ட வாக்படன் பௌத்த மதத்தை தழுவியிருந்தவேளை அவர் பிரமாண ஆதிக்கமில்லாமலிருந்த தெற்கு பாரத்திற்கு ஒளிந்து ஓடி கேரள மாநில

*சேர்த்தலையில் வந்தடைந்து நிரந்தரமாக குடியேறியதாக வரலாறு சொல்கிறது. கி.பி. 8-ம் நூற்றாண்டில் கேரளத்தில் வந்து சேர்ந்த வாக்படருடைய ஆயுர்வேதத்திற்கு இங்கே புதிய வடிவம் கிடைத்தது. கவுதம புத்தனைத் துதித்து வணங்கும் மங்கள கவிதையுடன் தொடங்கின அட்டாங்க சம்கிரகமும் அட்டாங்க இருதயமும் ஆயுர்வேத இருதயத்தில் மேல் கீழ் உள்ள அறைகள் ஆகும். இந்த வாக்பட பாரம்பரியத்தினுடைய பின்தொடர்ச்சியாக கி.பி. 17-ம் நூற்றாண்டில் டச்சுக்காரருடைய உதவியோடு சேர்த்தலைக்காரனான இட்டி அச்சுதன் வைத்த "ஹோர்டஸ் மலபாறிக்கஸ்' என்ற அற்புதமான நூல் எழுதினார்.*



*உத்திர பிரதேசத்தில் பௌத்த, சைனமத கலாச்சாரங்கள் துரத்தி விரட்டப்பட்டாலும், தென்னிந்தியாவில் அந்த கலாச்சாரங்கள் தங்க யுகம், தமிழ் சங்க காலத்தினுடைய பின்பலத்தோடு சங்கராச்சாரியருடைய காலம் வரை பிடித்து நின்றது. சங்கராச்சாரியர்களுக்கு பின் உண்டான காலகட்டத்தில் தென் பாரதத்தில் தொடர்ந்து புதுபித்து தொடர முடியவில்லை. கேரளத்தில் இந்த ஆயுர்வேத பாரம்பரிய சிகிட்சையை பின்தொடர்ச்சியாக மருத்துவ பாரம்பரியம் கொண்ட ஈழவரான மக்களினால் நிலை நின்றிருந்தது. இக்காரியம் டாக்டர். எ. அய்யப்பன் தனது சோசியல் ரவல்யூசன் இன் கேரள வில்லேஜ் என்ற நூலில் இப்படி பதிவு செய்திருக்கிறார். இந்தியாவில் தான் படித்த சைன; புத்தர்கள் சமற்கிருத மொழியிலும், ஆயுர்வேத மருத்துவத்திலும் அதிதிறமையானவர்கள். மேலும் ஈழவரை, ஆயுர்வேதத்தில் கேரளாவில் அறிவாளிகள் ஆக்கியதோடு, ஈழவர் தான் கேரளத்தில் ஆயுர்வேதத்தை*

கையாளுகிறார்கள். குணகரும், ஆதிவாசி மக்களும் அதன் பின்னர் இம்மருத்துவத்தை அதிகமாக கையாளத் தொடங்கினர்.

இந்த புத்த மதத்தினரின் வாரிசுகளிடமிருந்து உத்திர பிரசேத்திலும் கேரளத்திலும் பார்ப்பனர்கள் மருத்துவத்தை பயின்றனர். இந்து மதம், புத்த மதத்தை தெற்கு பாரதத்திலிருந்து விரட்டியபோது அவர்களை தீண்டதகாதவர்கள் என்ற நிலைக்கு தள்ளி விட்டனர். இவர்களில் திறமைசாலிகளான மருத்துவர்களுக்கு, மக்களிடையே உள்ள செல்வாக்கு அடிப்படையில், நிர்பந்தப்படுத்தி யாகத்துக்குட்படுத்தி பூனூல் அணிய செய்து அவர்களை கேரளாவில் அஷ்ட வைத்தியர்களென அழைத்தனர். கொடுங்கல்லூர் குஞ்சுகுட்டன் தம்புரான் தன்னுடைய கேரள வரலாறு என்ற நூலில் இதை தெளிவாக கூறியுள்ளார்.

புத்தமதத்திலிருந்து, இந்துவாக மதம் மாற்றப்பட்ட அஷ்ட மருத்துவர்களுக்குத் பிராமணர்கள் சில தீண்டக்கூடாத கட்டுப்பாடுகள் விதித்திருந்தனர். அவர்கள் பூசைகள் செய்ய அனுமதிக்கப்படவில்லை. பூனூல் அணிந்திருந்தாலும் பிராமணப் பெண்களோடு இவர்கள் திருமணம் செய்ய முடியாத கடுமையான கட்டுப்பாடுகள் இருந்தன. காரணம், அவர்கள் முஸ்தக் என்ற தனி சாதி அடிப்படையிலே இவர்களை வைத்திருந்தனர். சில நாட்களில் ஆயுர்வேத மருத்துவ நூலான அட்டாங்க ஹிருதயத்தை வாசிப்பதற்குக் கூட அவர்களுக்குத் தடையிருந்தது. புத்தரான வாக்பட்டரோடு கொண்ட தொடர் பகையினால் சில தினங்கள் கொண்ட அட்டாங்க இருதயத்தை வாசிக்கக் கூடாது என பிராமணர்கள் தடுத்தனர். அட்ட மருத்துவர்களை விடவும் திறமையான அதிகாரப் பிரசித்தமான மருத்துவர்களைத் தேர்ந்தெடுத்து இட்டி அச்சுதன் உலக மருத்துவராக அறிமுகமானார். வெளுத்தேரி கேசவன் மருத்துவர், பெருநெல்லி மரு. கிருஷ்ணன், உப்போட்டு கண்ணன், தெய்யில் குமாரன் ஆசான், மரு. கிருஷ்ணன், சாவார்கோடு மரு. மார்த்தாண்டன், சோலையில் மரு. குஞ்சு ஆசாமி, காவிக்கரை கோவிந்தன் மருத்துவர், மனக்கோடம் கேசவன் மருத்துவர், பரவூர் கேசவன் மருத்துவர் ஆகியோர் ஆயுர்வேத நூல்களுக்கு வழங்கிய பங்களிப்பு ஏராளம்.

சிந்து சமவெளி நாகரீகக் காலத்திலும், புத்த மதக் காலங்களிலும் மட்டுமே இந்தியர்கள் என்று அழைக்கப்படும் கருத்து சரியானது. மருத்துவ நூல்களானாலும் கலை நூல்களானாலும் பிரசுரமாகி வெளிவந்தால் அது உலகத்துக்குரியதாகும். ஒரு மனிதருடைய பிறப்பு முதல் இறப்பு வரை உள்ள மருத்துவ நூல்களெல்லாம் சிந்து சமவெளி நாகரீகத்தை அடிப்படையாகக் கொண்டது. அதன் பிறகு ஆதிக்கம் செலுத்திய பல மத அமைப்புகள் மருத்துவ நூல்களை மாற்றியும், திருத்தியும் எழுதினர்.

# சிந்தாமணி எடுத்துரைக்கும் துறவு நிலை

**முனைவர் ஆனைவாரியார் ஆனந்தன்**
*சேத்தியாத்தோப்பு தமிழ் சங்க நிறுவனர் – தலைவர்*



இளமைப் பருவத்திலேயே துறவு நிலையை மேற்கொண்டவர் சிந்தாமணியைச் செய்த திருத்தக்கத் தேவர். சமண மதத்தைத் தழுவி நின்றவர். முதல் துறவு நிலைக் காட்சி நூலின் முதலாம் இலம்பகத்தில் இடம்பெறுகிறது. மன்னனின் மாறாமனம் கண்டு, ''மன்னா, தவற்றைச் சுட்டிக்காட்டுதல் அமைச்சர் கடமை, தருமநூல் கட்டளைப்படி என் கடமையைச் செய்தேன் இனி நான் துறவு மேற்கொள்வேன்'' எனக்;கூறி வாழ்க்கையையே வெறுத்துச் செல்லும் காட்சி நம் நெஞ்சை நெகிழ்விக்கிறது.. அதுவும் ஓர் அமைச்சர் பதவியில் இருப்பவன், மதிகெட்ட மன்னனின் கீழ் பணிபுரிவதைவிட துறவுநிலையே மேலானது என்று துணிய எத்தகைய மனநிலை வேண்டும்?

சுடுகாட்டில் சீவகனைப் பெற்ற விசயை, குழந்தையை கந்துக்கடன் எடுத்துச் சென்றபின் சண்பகமாலை வடிவில் வந்த தெய்வத்தின் உதவியால் பல காத தூரம் சென்று அமரிகை ஆற்றைக் கடந்து தண்டகாரணியம் என்னும் காட்டில் தவம் புரிவோர் தங்கும் இடத்தை அடைகிறாள். அத் தவப்பள்ளியில் உள்ள மகளிர் எல்லாம் ஒன்று சேர்ந்து விசயையை எதிர்கொண்டழைத்து தவநெறியில் சேர்த்தனர்.

விசயை, தன் அணிகலன் ஒவ்வொன்றையும் கழற்றி எறியும் காட்சி, அவலக் காட்சியாகும். கொடி ஒன்று மலர்ந்து, உதிர்ந்து மொட்டையாய் நின்றது போல், அணிமணிகளையெல்லாம் களைந்து எறியும் விசயை, தன் மகன் உயர்வடைய எண்ணி காவியுடையைத் தரித்துக் கொள்கின்றாள். இது இரண்டாவது காட்சியாகும் துறவுநிலை.

கட்டியங்காரனைக் கொன்று தனது நாட்டை மீட்டு செங்கோல் செலுத்தி வந்தான் சீவகன் தனது தேவிமாற் எட்டுப் பேரோடும் சேர்ந்து இன்புற்று சீவகன் ஆட்சி புரிந்து வரும் நாளில், விசயை தன் மகனுக்குத் தருமோபதேசம் செய்கிறாள். தருமோபதேசம் செய்தபின், தான் மேற்கொண்டிருந்த துறவு நிலைக்கே மீண்டும் செல்ல விரும்பி, மகன் சீவகனின் இசைவைப் பெறுகிறாள்.

*விசையயின் துறவு கண்டு, சீவகனின் வளர்ப்புத்தாயான சுநந்தையும் துறவு மேற்கொள்கிறாள். விசையயும் சுநந்தையும் துறவை ஏற்றுப் பல்லாக்கில் சென்ற காட்சியை "ஓர் உயிர் ஒழித்து, இரண்டு உடம்பு போவதே போல்" காட்டுகின்றார் திருத்தக்கத் தேவர்.*



*விசையை, சுநந்தையை தொடர்ந்து மேலும் பல மகளிரும் துறவை மேற்கொள்கின்றனர். அவர்கள்; ஓர் தவப்பள்ளியை அடைந்து பம்பை என்னும் பெண் தவசியைத் தொழுது "அடிகளே எம்மையெல்லாம் பிறவிக்கடலினின்றும் கரையேற்றுவீர்|| என்று வேண்டுகின்றாள். பம்பையின் அறிவுரைகளைக் கேட்டுத் தீட்சை பெற்று விதிப்படி துறவு நிலையை மேற்கொண்டு தவம் செய்து வந்தனர் விசயை சுநந்தை முதலானோர்.*

*அடுத்து, காப்பிய நாயகனான சீவகனே மனம் மாறி துறவை மேற்கொள்ளும் காட்சி! எட்டுப் பெண்களை மணந்து இன்பக் கடலில் நீந்தி வந்த சீவகன், ஒருநாள் தன் தேவியர் எண்மருடன் சுற்றுலா சென்றான். சோலைக்காட்சிகளும், வனங்களின் வனப்புகளும் மகிழ்ச்சியை ஊட்டின. காட்டில், ஒரு பலா மரத்தின் கீழே சீவகன் ஓய்வெடுத்திருந்த காலை, ஓர் ஆண் குரங்கு, தன்னோடு பிணங்கிய தன் காதல் மந்தியை மகிழ்விக்கும் பொருட்டுப் பலாப்பழம் ஒன்றைக் கீறிச் சுளைகளை எடுத்துக் கொடுத்தது. உடனே தோட்டக்காவலன் ஓடிவந்து குரங்குகளை விரட்டித் துரத்திவிட்டு பலாப்பழத்தைத் தூக்கிச் சென்று விட்டான். தூக்கிச் சென்றவன் தானே அப்பழத்தை உண்டு மகிழ்ந்தான்.*

*இதைக் கண்ணுற்ற சீவக மன்னன் பலவாறாய்ச் சிந்திக்கத் தொடங்கினான்.*

*கைப்பழம் இழந்த மந்தி*<br>
*கட்டியங்கார னொத்து*<br>
*இப்பழம் துரந்து கொண்ட*<br>
*சிலதனும் என்னை யொத்தான் !*<br>
*இப்பழம் இன்று போகத்*<br>
*தின்பமே போதுமென்று*<br>
*மெய்ப்பட உணர்வு தோன்றி*<br>
*மீட்டிதே கூறினானே!*

*மெலியவர் பெற்ற செல்வம்*
*போராடும் கீழ்ந்து வெளவி*
*வலியவர் கொண்டு மேலை*
*வரம்பிகந்த ரம்பு செய்யும்!*
*கலியது பிறவி கண்டாம்*
*காலத்தால் அடங்கி நோற்று*
*நலிவிலா உலகம் எய்தல்*
*நல்லதே போறும் என்றான்!*

*கையிலுள்ள பழத்தை இழந்த மந்தி கட்டியங்காரனை ஒத்தது. அம்மந்தியிடமிருந்து பழத்தைக் கவர்ந்து உண்ணும் தோட்டக்காவலன், என்னை ஒத்தான். அவன் அப்பழத்தை உண்டு மகிழும் இன்பமோ யான் துய்க்கும் போக இன்பத்தை ஒத்தது.*

*மெலியவர்கள் பெற்ற செல்வத்தைப் பறித்து கொண்டு போய் வலியவர்கள் எல்லை மீறிச் செய்யும் கொடுமைகளைக் கொண்டதே இந்தப்பிறவி. எனவே, ஐம்பொறிகளை அடக்கி, நோன்பிருந்து, அழிவற்ற பேரின்ப வீட்டையடைய துறவறமே சிறந்தது என்று கூறுகின்றான் சீவக மன்னன்.*

*ஆம்; சீவகனின் உள்ளம் துறவை நாடித் துடித்தது. நல்வினையால் கிடைத்த இப்பிறவியாகிய மரம் இம்மரத்தை தீவினை என்னும் காற்று வந்து மோதி அடியோடு சாய்த்துவிடும் முன் இல்லறத் தொடர்பை அறுக்கவேண்டும் என்று கருதுகின்றான், சீவகன். காமமாகிய கொடிய கள்ளை உண்டு, துன்ப இருளில் மயங்கிக் கிடந்த எனக்கு அவ்விருள் போக்கும் ஒளி விளக்காம் துறவுள்ளம் காட்டிய மந்தியும் கடுவனும் தோட்டக்காரனும், எனக்கு நன்னெறி காட்டிய தேவர்களேயாவார்கள் என்று கூறும் சீவகன், செல்லும் வழி விட்டு, வேறுவழியில் செலுத்தப்படும் மதயானைப் போல, இன்ப நுகர்ச்சியில் வைத்த தன் எண்ணத்தை மீட்டுக் கொள்வான் ஆயினான்.*

*அவனைச் சூழ்ந்திருந்த அன்பு மனைவியர் காதல் மீதுற, புருவத்தை வளைத்தும், கண் விழிகளை பிறழ்த்துக் காட்டியும், புன்னகையை உதிர்த்தும் இன்பக் கோட்டைக்குச் செல்ல ஈர்த்தனர். ஆயினும் சீவகன் மனங்கலங்காது உறுதியுடன் இருந்தான். துறவு பூண உறுதி கொண்டவன், அருகன் கோயிலுக்குச் சென்று வணங்கினான், போற்றினான், துதித்தான். சாரணர்களைக் கண்டு வணங்கிட, 'தெருளலேன், செய்த தீவினை யெனும் இருள் நீங்க அருள் புரிவீர்' என வேண்டினான்.*

*சாரணர்களிடம் அருளுபதேசம் பெற்றவன், தன் தேவியருடன் அரண்மனை சேர்ந்து, நந்தட்டனை அழைத்து 'நீ இவ்வுலகாள்வாய், நான் துறவு மேற்*

*செல்கிறேன்!' என்று கூற, நந்தட்டனோ, "இவ்வற்ப வாழ்வை யானும் வேண்டேன்;;, நின்வழியே என் வழியும்!" என்று அரச சுகத்தை வெறுக்கிறான். துறவை நாடுகிறான். பின் சீவகன் தன் புதல்வன் சச்சந்தனை அழைத்து, அவனுக்கு மணிமுடி சூட்டித் துறவு நிலையை மேற்கொள்கிறான். விசையையுடன் போய்ச் சேர்கின்றனர்.*

*விதிப்படி துறந்து விபுலகிரியில் தவம்செய்து வீடுபேற்றை அடைகிறான் சீவகசாமி!*

*ஏந்திழையர் எண்மரைக் காதலித்து மணந்துகொண்ட சீவகசாமியின் கதை மூலம் சமணமுனிவர் திருத்தக்கதேவர் இருபெரும் உண்மைகளை நமக்கு அறிவுறுத்துகின்றார்.*



*முதலாவது.....*

*இவ்வுலக இன்பத்தினை முற்றாக, நிறைவாகத் துய்த்தாலன்றி மக்கள் மனம் பண்படாது என்பதாகும்.*

*இரண்டாவது.....*

*அவ்வின்பத்திலேயே ஆழ்ந்து அமிழ்ந்து விடாமல், அதைக்கடந்து பேரின்ப வீடடைய முயல வேண்டும் என்பதாகும்.*

*துறவறத்தை மேற்கொள்வோர்க்கு கொல்லாமை என்னும் விரதம் இன்றியமையாதது என்கின்றார் சிந்தாமணியார். சமணமத மும்மணிகளான, ஞானம், காட்சி, சீலம் ஆகியவை தெளிந்த திண்ணிய மனப்பான்மை, தத்துவத்தை உள்ளப்படி அறிதல், தூயவாழ்வு என்று பொருள்படுகின்றன.*

*இல்வாழ்க்கையில் திளைப்பவர்கள் விரைவில் துறவை மேற்கொள்ளவேண்டும் என்பதே சமண மதம் போதிக்கும் சித்தாந்தமாகும். துறவறத்தை மேற்கொள்வோர்,*

- *ஆடை அணிகலன்களை அகற்றவேண்டும்.*
- *தன் தலைமுடியை அகற்றிவிட வேண்டும். அகற்றிய முடியை ஆற்றில் அல்லது கடலில் சேர்ப்பிக்க வேண்டும்.*

• வர்த்தமானருடைய திருவடிகளைத் தொழுது தவத்தை மேற்கொள்ள வேண்டும்

என்று சமணமதம் கூறுகின்றது. இதையே சீவக சிந்தாமணியும் எடுத்துரைக்கின்றது.

துறவு நிலையை மேற்கொள்ள விரும்பிய சீவகசாமி, அருகப்பெருமானின் திருவடிகளை மீண்டும் மீண்டும் வணங்கியவனாய் ஒரு சோலையை அடைந்தான். தன் ஆடை அணிகலன்கள் எல்லாவற்றையும் களைந்தான் .அழகிய தாமரை போன்ற தன் கைகளால் தலைமயிரைப் பறித்து ஒரு வெள்ளித்தட்டிலே இட்டான். அக்காட்சியானது சூரியன் தன் கதிர்களை சந்திரனிடம் செலுத்துவதைப் போன்றிருந்ததாகக் காட்டுவார், சிந்தாமணித் தேவர்.

அவ்வெள்ளித் தட்டை சுதஞ்சணன் ஏந்திச் சென்று, நாற்கடலைக் கடந்து பாற்கடலில் 'நமோ அரகந்;தாணம்' என்னும் மந்திரத்தை உச்சரித்து வெள்ளித் தட்டை நீரில் சேர்த்தான். துறவு நிலை மேற்கொண்டு தவமியற்றுவோர்;, இருவினையாகிய கோட்டை மதிலை முற்றுகையிட்டு அழிக்க,

மெய்ஞ்ஞானமாகிய தேரில் ஏறி, இன்னுயிர் ஓம்பல் என்னும் குதிரைப்படை கொண்டு, நற்சிந்தையெனும் களிற்றுப் படையோடு, இறையருளே காலாட்படையாக, நல்லொழுக்கமே பாதுகாப்புக் கவசமாக, அறிவுரைகளையே ஒளிறுவாள் கேடயமாகக் கொண்டு, போர்செய்ய வேண்டும் என்கின்றார், தேவர்.

'ஒளிறுதேர் ஞானம், பாய்மா

இன்னுயிர் ஓம்பல்;;, ஓடைக்

களிறுநற் சிந்தை; காலாள்

கருணையாம்; கவசம் சீலம்

வெளிற்றில் வாள் விளங்கு செம்பொன்;

வட்டமெய்ப் பொருள தாகப்

பிளிறுசெய் கருமத் தெவ்வர்

பெருமதில் முற்றினானே'!

என்று இருவினைகளை வெல்லும் வழியைக் காட்டும் திறம் எண்ணி எண்ணி இன்புறுதற்குரியது.

- *ஆசையை அறுக்க வேண்டும்*
- *பிற உயிர்களிடத்தும் அன்பு செலுத்த வேண்டும்*
- *அறம் செய்ய வேண்டும்*
- *ஐம்பொறிகளை அடக்க வேண்டும்.*

*அடக்கி ஒழுக்கமுடன் வாழ வேண்டும்.*

*என்று கூறும் திருத்தக்க தேவர், பொய்மை வேடம் பூண்டு, துறவறம் மேற்கொள்வோரைச் சாடுகின்றர்.*

*வீட்டை, வீடுபேற்றையடைய வேண்டி சடைமுடி வளர்ப்பதும் மழித்தலும் நீட்டலும் காவியணிவதும், மண்டை யோடுகளை ஏந்துவதும் தனித்திருத்தலும் பிறவியைக் கடக்கும் வழிகள் ஆகா! மாறாக இவையெல்லாம் இழிந்த இப்பிறவிக்கு இடுகின்ற வித்தாகவே அமையும் என்கின்றார் தேவர். காமத்தை கடக்க வேண்டும். இன்றேல் விரதங்கள் வீணே! என்று கூறும் சிந்தாமணியார்,*

*சையம் பூண்டு சமுத்திரம் நீந்துவான்*

*உய்யுமேல் தொடர்ப்பாட்டின் இங்கு யாரையும்*

*எய்தினார்களும் உய்ப்*

*கல்லைக் கட்டிக்கொண்டு கடலை நீந்துவான் பிழைக்கக் கூடுமென்றால், காம நுகர்ச்சியோடு மேலான விரதங்களைக் கொண்டவர்களும் வீடுபேற்றையடைய முடியும் என்கின்றார். காய்கனிகளை உண்டு காட்டில் வாழ்ந்து விட்டால் மட்டும் பிறவி நோயிலிருந்து விடுபட்டு விடமுடியாது என்று கூறும் சமண முனிவர், காட்டில் உறைந்து காய்கனிகளை உண்பவர்கட்கெல்லாம் வீடுபேறு கிடைக்குமெனில் முதலில் வெளவால்களுக்குத்தான் வீடுபேறு கிடைத்தாக வேண்டும் என்கின்றார். ஆம்,*

*தூங்குறிக் கிடந்து காயும்*
*பழங்களும் துய்ப்ப*
*பாங்கலா வினைகள் என்றால்*
*ஓங்குநீர் மரத்தில் தூங்கும்*
*ஒண்;கிறை ஒடுங்கல் வாவல்*
*பாங்;கரில் பழங்கள் துய்ப்ப*
*பழவினை பிரியும் அன்றே;*

*என்கின்றார்.*

அல்லிக் காய்களையும் புல்லிரிசியையும் உண்டு ஐந்து தீயின் நடுவில் நின்று நோன்பிருப்போர்க்கெல்லாம் தீவினைகள் அறுந்துபடாது. அவ்வாறாயின் வெப்பக்காட்டில் கற்களை உண்டு வாழும் புறாக்களுக்குத்தான் முதலில் வீடுபேறு என்கின்றார் தேவர்.



ஷஷஅல்லியும் புல்லும் உண்டாங் காரழல் ஐந்துள் சொல்லிய வகையின் நோற்பத் துணியும் நின்று வெவ்வினைகள் எண்ணின் கல்லுண்டு கடிய வெம்பும் கானுறை புறவமெல்லாம் புல்லிய வினையை வென்று புறக்கொடை காணுமென்றே என்று சாடுகின்றார். முடிவளர்த்து நீரில் மூழ்குபவரெல்லாம் பிறப்பொழிவாரெனில், முதலில் கரடிக்குத்தான் வீடுபேறு || என்று கூறுபவர்.

நீட்டிய சடையமாகி நீர்மூழ்கி நிலத்தில் சேர்ந்து
வாட்டிய உடம்பின் யாங்கள் வரகதி விளைத்தும் என்னின்
காட்டிடைக் கரடி போகிக் கயம் மூழ்கிக் காட்டில் நின்று
வீட்டினை விளைக்க வேண்டும் வெளிற்துறை விடுமின் என்று புறவொழுக்கம் மட்டுமே வீடுபேற்றைத் தந்துவிட முடியாது என்கின்றார். மங்கையின் சுகத்தை பஞ்சணை மெத்தையில் துய்த்தலை ஒழித்து, காட்டு ஓலைக் குடிலில் மண்தரையில் படுத்துத் துய்ப்பதால் வீடுபேறு கிடைத்துவிடுமெனில், முதலில் மலைவாழ்க் குறவர்கட்கெல்லவா கிடைத்தாகவேண்டும்.

களைவளர் கிளவியாந்தம் காமர்மென் சேக்கை நீங்கி
இளைவளர் குரம்பையங்கன் இருநீலம் சேக்கையாக
முலைவளர் ஆசம்தோய முழுவினை முரியும் என்னின்
மலைவளர் குறவர்;க்கம்மா வினைகளும் மாயுமென்றே!

என்று கேட்கின்றார்.

தூயவெள்ளையாடையில் படிந்த இரத்தக்கரையை இரத்தத்தாலேயே போக்கிவிட முடியாது. அதுப்போல மங்கையின் மேல்வைத்த ஆசையால் உண்டான பாவக்கறையை, அதே மங்கையுடன் கூடிக்களிப்பதால் போக்கிவிட முடியாது என்று கடிந்துரைக்கின்றார், திருத்தக்க தேவர். எனவே, இல்லறத்தை முற்றாக விடுத்து மேற்கொள்வதே தவம். அத் தவநிலையே சிறந்த துறவு நிலை என்று எடுத்துரைக்கின்றது சீவகசிந்தாமணி.

# நான் ஆணையிட்டால்

### *(சைதையாரின் எம்ஜிஆர் திரைப்படப் பாடல் நுண் ஆய்விருக்கையின் உரை)*

***சப்தரிஷி லா.ச.ரா***
*எழுத்தாளர், திரைப்பட விமர்சகர்*



*நான் ஆணையிட்டேன் அது நடந்து விட்டதால் ஏழைகள் வேதனை படவில்லை' என்று*

*பாடவில்லை*

*இது எதிர்கால நம்பிக்கைக்குரிய பாடல் நம்மைப் பொருத்தவரை எம்.ஜி ஆரைப்பொருத்தவரை அது தி.மு.கவின் எதிர்காலம் அண்ணாவான் ஆட்சி பற்றியது..*

*உலகம் சுற்றும் வாலிபன் வரை அவரது உழைப்பு அத்தனையுமே முழுக்கமுழுக்க தி.மு.க வுக்கானதாகத்தான் இருந்தது ஆனால் நம் மனதைப் பொறுத்தவரை அது எம் ஜி ஆருக் கானதாக இருந்ததால்தான் பின்னால் இருந்த குறுகியகாலத்தில் அவரால் ஆட்சிக்கு வரமுடிந்தது*

*வாலிசார் எங்கள் வீட்டிற்கு வந்திருந்த போது நான் கேட்டேன். "எம் ஜி ஆருக்கும் சிவாஜிக்கும் பாடல்கள் எழுதுவதில் என்ன வித்யாசம் காட்டுவீர்கள் ?"*

*வாலிசார் சொன்னார் சிவாஜி எந்தக் கேரக்டரில் நடித்தாலும் அந்த காரெக்ட்ருக்காக எழுதுவேன். எம்.ஜி. ஆர் எந்தக்காரெக்டரில் நடித்தாலும் எம்.ஜி. ஆருக்காக பாடல் எழுதுவேன்*

---

*நான் ஆணையிட்டால் அது நடந்துவிட்டால் இங்கு ஏழைகள வேதனை படமாட்டா*

*ஒரு தலைவன் உண்டு*

*அவன் கொள்கையுண்டு அதைஎப்போதும் காத்திருப்பேன்*

*எதிர் ர்காலம் வரும். என் கடமை வரும்*

*இந்த காக்கைகள் கூட்டத்தை ஒழிப்பேன்*

*பொதுநீதியிலே புதுப்போதையிலே வரும் நல்லோர் முகத்திலே விழிப்பேன்*

*இந்தவரிகள் ஒரு நாடோடி வாழ்க்கைவாழும் எங்கவீட்டுப்பிள்ளை இளங்கோ விற்கு எழுதப்பட்டதா?. நம்மவீட்டுப்பிள்ளை எம்.ஜி.ஆர் காக எழுதப்பட்டதா பாட்டு பாடிக்கொண்டே இருக்கையில் விசுக் என்று இரண்டடிக்கு இரண்டடி டீ பாய் மீது பாலன்ஸாக நிற்பது எம்.ஜி.ஆர் ஒருத்தருக்கே சாத்தியம்' மாடிப்படியின் நடுப்படிகளில் எம்ஜிஆர் குப்புறப்படுத்த படி பாட காமர மட்டும் படிப்படியாக மேலேறி எம்.ஜி.ஆர் காண்பிப்பது அழகு.*

---

*அடுத்து எம்.ஜி.ஆருக்கென்றே அமைக்கப்பட்ட இரட்டை வழி மாடிப்படிகளில் கருப்புசிவப்பு வண்ணப்பின்னணியில் யார்மேலும் அடிவிழாமல் சாட்டையைமட்டும் சொடுக்கி சொடிக்கி படியேறும் அழகோ அழகு.*



*இன்னெரு டாப்' ஆங்கிள் ஷாட்டில் வெண்ணிற பாண்ட் கருப்புசட்டையில் குப்புறித்தபடி ஒருகையை மையமாகவைத்து சுழன்றபடி சிரித்துப்பாடும் காட்சிதான் இந்தியாவின் எல்லா மொழிகளிலும் வீட்டில் கூட விசிலடித்து ஆர்ப்பரித்தபடி ரசிகர்கள் பார்த்ததாக அந்தக்காலத்தில் ஒரு சர்வே உண்டு தெலுகு படத்திலும் ஹிந்திப்படத்திலும் இந்தக்காட்சிகளோ பாடலோ கிடையாது மூன்று மொழிகளிலுமே தயாரித்தவர்கள் விஜயா வாஹினியின் நாகிரெட்டி சக்ரபாணிதான் ஆனால் தமிழில்மட்டும் எம். ஆளின் வீரஉணர்வை வெளிக்காட்டும்படி பாடல் எழுதிய வாலி, பொருத்தமான இசையமைத்த விஸ்வனாதன் ராமமூர்த்த காட்சிகள் நேர்த்தியாக படமாக்கிய சாணக்யா. இவர்கள் அனைவருமே பாராட்டுக்குறியவர்கள். இவர்கள் எல்லோரும் உழைத்திருக் தாலும் இதன் வெற்றி எம்.ஜி.ஆர்க்கு மட்டுமே சாத்தியம்.*

## சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

**3/422, Thiruvalluvar Street,**
**Dinamani Nagar, Madurai 625 018.**
**Mob: +91 7010997639**

| | **நூல்கள்** | **விலை (Rs.)** |
|---|---|---|
| 1. | திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்) | 200 |
| **கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்** | | |
| 1. | உன்னோடு உரையாடுதல் | 100 |
| 2. | காதல் மொழி | 200 |
| 3. | பார்வையில் பூத்த நிலா | 100 |
| 4. | தேனடையும் வரலாறு | 100 |
| 5. | நுண்கலை மருத்துவன் | 200 |
| 6. | தொடரும் புழுதிக்கால்கள் | 100 |
| **முனைவர் செ. இராஜேஸ்வரியின் எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்** | | |
| 1. | வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். | 200 |
| 2. | எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம் | 200 |
| 3. | சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்) | 200 |
| 4. | வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட | 200 |
| 5. | மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர். | 200 |
| 6. | எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி | 200 |
| 7. | எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி | 200 |
| 8. | ஒளி விளக்கு எம்.ஜி.ஆர். | 200 |
| 9. | வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I | 200 |
| 10. | நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - I] | 200 |
| 11. | பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II] | 200 |
| 12. | இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர். | 200 |
| 13. | முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன் | 200 |
| 14. | இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர். | 200 |
| 15. | எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு | 200 |
| 16. | படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு | 200 |
| 17. | Unique Fandom of MGR | 200 |

| | | |
|---|---|---|
| *18.* | எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம் | *200* |
| *19.* | எம்ஜிஆர் படத்தில் சண்டைக்காட்சிகளின் சுவாரஸ்யங்கள்–I | *200* |
| *20.* | எங்க வீட்டுப்பிள்ளை | *200* |
| *21.* | எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும் | *200* |

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | தலைமை பொறுப்பேற்கலாம் | *120* |
| *2.* | இணையத் தமிழ் | *150* |
| *3.* | ஊடகச் சட்டங்கள் | *250* |
| *4.* | ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ் | *200* |
| *5.* | கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்) | *200* |
| *6.* | மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்) | *200* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**

**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு | *200* |
| *2.* | பெண் தெய்வ வழிபாடு | *200* |
| *3.* | தேவேந்திரன் | *200* |
| *4.* | மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை) | *200* |
| *5.* | இரு நிலத்தில் திருமுருகன் | *200* |
| *6.* | முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்) | *200* |
| *7.* | வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும் | *200* |
| *8.* | யானைக்கடவுள் | *200* |
| *9.* | பெண் பூப்பின் புனித வழிபாடு | *200* |

## முனைவர் செ. இராஜேஸ்வரியின்

**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | பாடுபொருளும் பாசப்பொருளும் | *250* |
| *2.* | "பூ மர நிழலி"ன் களமும் காலமும் | *200* |
| *3.* | "2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு | *100* |
| *4.* | கவிஞர் முத்தமிழ் விரும்பியின் **கவிதையில் காதல்** | *100* |
| *5.* | கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள் | *200* |

## ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு

**முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | எட்டுத்திக் கும் செல்வீர் | *200* |
| *2.* | அவன் கடவுளுக்கு நிகரானவன் | *200* |
| *3.* | செக்கச் சிவந்த ரோஜா | *200* |
| *4.* | கலீல் ஜிப்ரா னின் "மணலும் நுரையும்" | *200* |
| *5.* | கலீல் ஜிப்ரானின் "பாடல்கள் 14" | *200* |

## Tamil Classics in English – (Dr. C. Rajeswari)

| | | |
|---|---|---|
| *1.* | Kurunthokai | *200* |
| *2.* | Agananooru | *200* |

| | | |
|---|---|---|
| *3.* | Purananooru | *200* |
| *4.* | Naaladiyaar | *200* |
| *5.* | Aasaarakkovai | *200* |
| *6.* | Thiru Kutraala Kuravanji | *200* |

***தற்காலத் தமிழில் சங்க இலக்கிய நூல் வரிசை***

| | | |
|---|---|---|
| *1.* | *குறுந்தொகைக் கவிதைகள்* | *200* |

***மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள் – முனைவர் செ. இராஜேஸ்வரி***

| | | |
|---|---|---|
| *1.* | *மொழிபெயர்ப்பியல் ஆய்வு (ஆய்வு நூல்)* | *200* |
| *2.* | *கவிதை மொழிபெயர்ப்பு* | *200* |
| *3.* | *நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author)* | *200* |
| *4.* | *மொழிபெயர்ப்பில் பெயரும் பொருளும்* | *200* |

***தமிழ் இலக்கண நூல்***

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழில் வேற்றுமை உருபுகள்* | *200* |

***சிறு கதை, கவிதை***

| | | |
|---|---|---|
| ***1.*** | *அமராவதியின் காதல் - சத்யப்பிரபா* | *200* |
| ***2.*** | *ரோஜா மொட்டு (சித்திரக் கவிதைகள்) - சத்யப்பிரபா* | *200* |

***மாத இதழ்கள்***

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழணங்கு மாத இதழ்* | *200* |
| *2.* | *Love Thamizh* | *500* |

***பேராசிரியர் முனைவர் தே.ஞானசேகரனின் நூல்கள்***
***ஆங்கிலத்தில் – முனைவர் செ. இராஜேஸ்வரி***

**Moonstone Publication, Madurai**

| | | |
|---|---|---|
| *1.* | Emerging Mallarism | *200* |
| *2.* | Festival of lord Indra | *200* |
| *3.* | Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam Kudumbanar) | *200* |
| *4.* | Re reading of Pallu literature | *200* |
| *5.* | Mallariyan Literature | *200* |
| *6.* | Frontyard without My Dad (Poem) | *200* |

**Poems of Er.Poet Muththamizh Virumbi - In English Dr. C. Rajeswari**

**[Moonstone Publication]**

| | | |
|---|---|---|
| *1.* | Therapist of the Finest Art | *200* |
| *2.* | Following Dusty Feet | *200* |

**Other Books**

| | | |
|---|---|---|
| *1.* | Concepts of Constitution - Dr.S. Kalai Arasu | *300* |
| *2.* | Aranyani By Vijeni (English Novel Part I & Part II) | *200* |

***தமிழணங்கு மாத இதழை வெளியிடுவோர்:*** *இ. சதீஷ் ராஜ்குமார் (அட்வகேட்), இயக்குனர், சந்திரோதயம் அறக்கட்டளை, 3/422, தினமணி நகர், மதுரை 625 018, Ph: +91 7871123226*